வி. புறத்து உறுப்பானவை, இடமும், பொருளும், ஏவல்செய்வோரும், முதலானவை. இல்லறத்திற்குத் துணையாகிய அன்போடுகூடாதபோது, அவற்றினாலே பிரயோசனம் இல்லையாதலால், எவன்செய்யுமென்றார். உறுப்பைப்போலிருப்பதினாலே, உறுப்பென்றது உவமையாகுபெயர். தேகத்திற்கண்முதலாயின உறுப்புக்கள் எல்லாம் என்னபயனைச்செய்யும், மனத்தின் இடத்தில் உறுப்பாகிய அன்பிலாதவர்களுக்கு, எனச்சொல்லுவாருமுண்டு. அப்படிச்சொன்னதற்கு, இல்லறத்தோடு ஒருசம்பந்தமும் இல்லாதிருப்பதை அறிந்துகொள்க.

இனி, இக்குறளுக்குவேறுரை. யாக்கையகத்துறுப்பு-உடம்பினுள்ளிருக்கின்ற அவயவத்தையொத்த, அன்பில்லவர்க்கு-அன்பில்லாதமனிதர்க்கு, புறத்துறுப்பு-(அந்த உடம்பின்) புறத்திலேயிருக்கின்றஅவயவத்தையொத்த, எல்லாம்-(மற்று உள்ளவை) எல்லாம், எவன்செய்யும்-என்ன (உதவியைச்) செய்யும், எ-று.

இதற்கு-வி. யாக்கையகத்துறுப்பு என்பவை, ஈரல்குடல்முதலாயினவை. அதன்புறத்துறுப்பு என்பவை, கைகால்முதலாயினவை. இந்த இருவகைஉறுப்புக்களும் உவமையாதலால், இல்லறத்துக்கு, அகத்துறுப்பாவது, அன்பு. அதற்குப்புறத்துறுப்பாவது, இடமும், பொருளும், ஏவல்செய்வோருமாம். உயிர்வாழ இருந்தவர்களுக்கு, உடலின் அகத்துஉறுப்பு இல்லாவிடின், அதன்புறத்துறுப்புக்கள்இருந்தும்பயனிலாததுபோல, இல்லறஞ்செய்தற்கு, அகத்துறுப்பாகிய அன்பில்லாவிடின், புறத்துறுப்பாகிய இடம், பொருள், ஏவல்செய்வோர், இருந்தும், பிரயோசனப்படாததினாலே, எவன்செய்யுமென்றார். அகத்துறுப்பு, அகத்தின்கண்ணுள்ள உறுப்பு. புறத்துறுப்பு, புறத்தின்கண்ணுள்ள உறுப்பு. அகத்துறுப்பன்பு, புறத்துறுப்பெல்லாம், என்பன, அகத்துறுப்புப்போன்றஅன்பு, புறத்துறுப்புப்போன்ற எல்லாம், எனவிரிதலால், உவமைத்தொகையெனக்கொள்க.

அ௰. அன்பின்வழிய துயிர்நிலையஃதிலார்க்
கென்புதோல்போர்த்தவுடம்பு.

ப. எது-அனபுமுதலாகவதனவழிநினறவுடமபேயுயிாநினறவுடமபாவதவவனபிலலாதாாககுளவான வுடமபுகளெனபினைத தோலாறபோாததனவாமுயிாநினறனவாகாவெனறவாறு.

வி. இலலறமபயவாமையினனனவாயின-இவைநானகுபாடடானுமனபிலவழிபபடுஙகுறறஙகூறபபடடது.

பு. (அன்-பு) எ-இ-ள். அன்பின்வழியது-அன்புமுதலாக அதன்பின்நின்றது, உயிர்நிலை-உயிர்நின்ற உடம்பு, அஃதிலார்க்கு-அந்த அன்பில்லாதவர்க்கு, உடம்பு-(உள்ள)உடம்புகள், என்புதோல்போர்த்த-எலும்பைத் தோலினாலேமூடினவை (ஆம்,) (அதுவே அல்லாமல் உயிர்நின்றவை அல்ல) எ-று.

வி. இல்லறம் பிரயோசனப்படாததினாலே அப்படிச் சொல்லப்பட்டன. வழி, பின். உயிர்நிலை, உடம்பு. உயிர்நிற்பதுக்கு இடம், ஆதலாற், காரணப்பெயர். உள்ள என்பது, வருவிக்கப்பட்டது. அஃதிலார்க்கு உள்ள உடம்பு எனக்கூட்டிப்போர்த்த, என்பதை, அஃறிணைப்பன்மைப்படர்க்கைஇறந்தகாலவினைமுற்று ஆக்குக. இவைநான்குபாட்டாலும், அன்பில்லாதபோது உண்டாகுங்குற்றஞ்சொல்லப்பட்டது.

---

௯. அதிகாரம்.

## விருந்தோம்பல்.

ப-ம. விருநதோமபல-அஃதாவது - இருவகைவிருநதினையுமபுறநதருதல-தெனபுலததாாமுதலியவைமபுலததுணமுனனைய விரணடுஙகடபுலனாகாதாாைநினைநது செயவனவாகலானுமபினனையவிரணடுமபிறநகிதலனமையானுமிடைநினறவிருநதோமபல சிறபபுடைததாயிலலறஙகடகுமுதலாயிறறு-வேறுகாதவனபுடையிருவாகூடியலலதுசெயயபபடாமையினிஃதனபுடைமையினபினவைககபபடடது.

பு-ம். (வி-ல்) அதாவது, முன்புஅறிந்ததினாலேகுறித்து வந்தவரும், அறியாதுவந்தவரும், ஆகிய் இருவகைவிருந்தினையும், பாதுகாப்பதைச்சொல்வது. தென்புலத்தார்முதலாகிய ஐந்திடத்துள்ளே, தென்புலத்தார், தெய்வம், என்கின்ற இரண்டுங் கண்ணினாலேகாணப்படாதவரை நினைந்துசெய்ப

வையாதலாலும், சுற்றம், தான், என்கின்ற இரண்டும், பிறர்க்குக்கொடுப்பவை அல்ல ஆதலாலும், இடையிலேநின்றவிருந்தோம்பல், சிறப்புடையதாய் மனையினிடத்திலேசெய்யப்படுந்தருமங்களுக்கெல்லாம்முதலாயிற்று. வேறுபடாத அன்புடைய இருவர்கூடி அல்லது செய்யப்படாததினாலே, இது அன்புடைமையின்பின்வைக்கப்பட்டது.

அக. இருந்தோம்பியில்வாழ்வதெல்லாம்விருந்தோம்பி
வேளாண்மைசெய்தற்பொருட்டு.

ப. எது-மனைவியோடுமவனததிறசெலலாதிலவினாணிருநதுபொருளகளைபபோறறிவாழுஞசெயகையெலலாமவிருநதினைாப பேணியவாகருபகாரஞசெயதறபொருடடெனறவாறு.

வி. எனவேவேளாணமைசெயயாதவழியிலவினகணணிருததலுமபொருளகளுஙகாரணமாகவருநதுனபசசெயகைகடகெலலாமபயனிலலையெனபதாம.

பு. (இ-டு)எ-இ-ள். இருந்தோம்பி-(மனைவியோடும்வனத்திலேபோகாமல்) இருந்து (பொருள்களைப்) பாதுகாத்து, இல்வாழ்வதெல்லாம்-மனையிடத்துவாழ்கின்ற செயல்களெல்லாம், விருந்தோம்பி-விருந்தினைப்பேணி, வேளாண்மை செய்தற்பொருட்டு-(அவர்களுக்கு)உபகாரஞ்செய்கிறநிமித்தம், எறு.

வி. எனவே உபகாரஞ்செய்யாதபோது, மனையினிடத்தில் இருப்பதும், பொருள்களைக்காப்பதுங், காரணமாகவருந்துன்பச்செயல்களுக்கு எல்லாம், பிரயோசனம் இல்லையென்பதாம்.

அஉ. விருந்துபுறத்ததாத்தானுண்டல்சாவா
மருந்தெனினும்வேண்டற்பாற்றன்று.

ப. எது-உணணபபடுமபொருளமிாதமேயெனினுநதனனைநோககிவநதவிருநதுதனனிலவினபுறததாகததானேயுணடலவிருமபுதனமுறைமையுடைததனறெனறவாறு.

வி. சாவாமருநதுசாவாமைககுககாரணமாகியமருநது- விருநதினறியேயொருகாறருணடலைசசாவாமருநதெனபாருளராயினுமொழிகவெனறுாைபபினுமமையும-இவையிரணடுபாடடாலுமவிருநதோமபவினசிறபபுககூறபபடடது.

பு. (வி-று) எ-இ-ள். சாவாமருந்தெனினும்-(உண்ணப்படுவது) சாவாதிருப்பதற்குக்காரணமாகிய அமிர்தமேயானு

னும், விருந்துபுறத்ததா-(தன்னைநோக்கிவந்த) விருந்து (தன் மனையின்)புறத்தில்உள்ளதாக, தானுண்டல்-தானேதனித்துண்பது, வேண்டற்பாற்றன்று-விரும்புதலுரிமையுடையது அல்லாதது, எ-று.

வி. விருந்தில்லாமலே ஒருபோதுதான்தனித்துண்பது, சாவாதிருக்கக்காரணமாகியமருந்தென்றுவாழ்த்தினாலும், அதுஉரிமையுடையது அன்று ஆதலால், விரும்பாதொழிக, என்று சொல்லினும், அமையும். இதற்குபாற்றன்று, ஆதலால், எனக் காரணம்வருவித்து, வேண்டல் என்பதை, எதிர்மறைவியங் கோண்முற்றுவினைஆக்குக. இவைஇரண்டுபாட்டாலும், விருந்தோம்பலின்சிறப்புச்சொல்லப்பட்டது.

அ௩. வருவிருந்துவைகலுமோம்புவான்வாழ்க்கை
பருவந்துபாழ்படுதலின்று.

ப. எது-தனனைநோககிவநதவிருநதைநாடோறுமபுறநதருவானதில வாழககைநலகுரவானவருநதிககெடுதலிலலையெனறவாறு.

வி. நாடோறுமவிருநதோமபுவானுககதனறபொருடொலையாதுமே னமேறகிளைககுமெனபதாம.

பு. (வ-று) எ-இ-ள். வருவிருந்து-(தன்னைநோக்கி)வந்த விருந்தினை, வைகலும்-நாள்தோறும், ஓம்புவான்-பாதுகாப்பவனுடைய, வாழ்க்கை-இல்வாழ்க்கையானது, பருவந்து-(தரித்திரத்தினாலே) வருந்தி, பாழ்படுதலின்று-கெடுவதில்லை, எ-று.

வி. தரித்திரத்தினாலே என்பது, வருவிக்கப்பட்டது. பருவரல், துன்பம். தினந்தோறும்விருந்தினைப்பாதுகாப்பவனுக்கு, அந்தப்பாதுகாவலாலே, பொருள்மேன்மேலும்வளருமென்பதாம்.

அ௪. அகனமர்ந்துசெய்யாளுறையுமுகனமர்ந்து
நல்விருந்தோம்புவானில்.

ப. எது-திருமகளமனமகிழநதுவாழாநிறகுமுகமினியனாயததககவிருநதினைபபேணுவானதிலவினகணெனறவாறு.

வி. மனமகிழதறகுககாரணநதனசெலவநலவழிபபடுதல-தகுதி-ஞானவொழுககஙகளானுயாதல-இதனறபொருளகிளைததறகுககாரணஙகூறியவாறு.

பு. (அக-ல்) எ-இ-ள். செய்யாள்-திருமகளானவள், அகனமர்ந்து-மனம்பொருந்தி, உறையும்-வாசம்பண்ணுவாள், முகனமர்ந்து-(இனிய)முகம்பொருந்தி, நல்விருந்து - நல்லவிருந்தினரை, ஓம்புவானில்-(உணவுமுதலாயினவைகளாலே)பாதுகாப்பவனுடையமனையினிடத்தில், எ-று.

வி. அவள்மனம்பொருந்துவதற்குக்காரணம், அவன்செல்வம்நல்வழிப்படுவது. நல்விருந்து, என்றவிடத்து, நன்மை, அறிவு, ஆசாரமுதலாயினவற்றின்மேல்நின்றது. இப்படிச்சொன்னதினாலே, மேன்மேலும் பொருள்வளர்வதற்குக்காரணந் தோன்றப்பட்டது.

அரு. வித்துமிடல்வேண்டுங்கொல்லோவிருந்தோம்பி
மிச்சின்மிசைவான்புலம்.

ப. எ-து - முன்னே விருந்தினை மிசைவித்துப் பின்மிக்கதனைத்தான் மிசைவானது விளைபுலத்திற்கு வித்திடுதலும் வேண்டுமோ வேண்டாவென்றவாறு.

வி. கொல்லென்பசை நிலை - தானேவிளையுமென்பது குறிப்பெச்சம் - இவை மூன்றுபாட்டானும் விருந்தோம்புவாரிம்மைக்கண்ணெய்தும் பயன் கூறப்பட்டது.

பு. (வித்-ம்) எ-இ-ள். விருந்தோம்பி-(முன்னே)விருந்தினை உண்பித்து, மிச்சில்-(பின்)மிகுந்திருந்ததை, மிசைவான்-உண்பவனுடைய, புலம்-கழனிக்கு, வித்துமிடல்-விதைவிதைத்தலும், வேண்டுங்கொல்லோ-வேண்டுமோ,(வேண்டாதனவாம்,) எ-று.

வி. கொல், என்பது, அசைநிலையிடைச்சொல். தானேவிளையுமென்பது, குறிப்பெச்சமாய்க்குறைந்துநின்றது.

இனிஇக்குறளுக்குவேறொருமுடிபு.முன்னேவிருந்தினரை (அசனமுதலாயினவைகளாலே) உபசரித்து, அவருண்டுகுறைந்திருந்ததைப்பின் உண்பவனுடையகழனியானது,விதைவிதைத்தலையும்விரும்புமோவிரும்பாது,தானேவிளையுமென்றவாறு.

இதற்கு-வி. வித்தும் என்ற உம்மையைப்பிரித்துக்கூட்டி,வித்திடலும்,எனவே, களைபறித்தலும், என் எதிர்தழுவுதலால், எதிரதுதழுவியஎச்ச உம்மையெனக்கொண்டு, கொல்லென்பதை, அசைநிலையாக்கி,ஓகாரமெதிர்மறைப்பொருள்பட நின்றதெனக்கொள்க. மிச்சில் என்பது, உண்டகுறையாகிய எச்சி

னுக்கும்,மிகுந்திருந்ததாகியபாண்டக்குறைக்குஞ், சொல்லப் படும். இவற்றைவடநூலார்பரிகலசேடமென்றும், பாண்டசே டமென்றுஞ்சொல்லுவர். இப்படிச்சொன்னதினாலே, விருந் தென்றது, ஞானவொழுக்கத்தை உடையநல்விருந்து எனக்கா ண்க. இவைமூன்றுபாட்டாலும், விருந்தோம்புவார் இம்மை யில்-அடையும்பயன் சொல்லப்பட்டது.

அசு. செல்விருந்தோம்பிவருவிருந்துபார்த்திருப்பா
னல்விருந்துவானத்தவர்க்கு.

ப. எது-தனகடசெனறவிருநதைப பேணிபபினசெலலககடவவிருநதி னைபபாாததுததானதனேனாடுணணவிருபபானமறுபிறபபிறதேவனுயவானினுள ளாாககுநலவிருநதாமெனறவாறு.

வி. வருவிருநதெனபதிடவழுவமைதி-நலவிருநது-எயதாவிருநது-இத னைமறுமைககணெயதுமபயனகூறபபடடது.

பு. (செல்-கு) எ-இ-ள். செல்விருந்தோம்பி-(அவனிடத் திற்) போனவிருந்தினைப்பேணி, வருவிருந்துபார்த்திருப் பான்-(பின்பு)போகத்தக்கவிருந்தினை (எதிர்) பார்த்துத்(தா ன் அவரோடேகூட உண்ணும்படியாகக்) காத்திருப்பவன், வானத்தவர்க்கு-(மறுபிறப்பிலேதேவனாகி) வானுலகத்துள்ள தேவர்களுக்கு, நல்விருந்து - நல்லவிருந்தாவான், எ-று.

வி. அவனிடத்திற்போம்விருந்து என்றுசொல்லாமல், வருவிருந்து என்றது, இடவழுவமைதியென்பதை, தரல்வரற ன்மைமுன்னிலையையுமேனையவேனையிடத்தையுமெய் துமென் ப, என்னுஞ்சூத்திரநோக்கிக்காண்க. இங்கேநன்மையாவது, பெறுதற்கு அருமை. இதினாலே, மறுமைப்பயன்சொல்லப் பட்டது.

அஎ. இனைத்துணைத்தென்பதொன்றில்லைவிருந்தின்
றுணைத்துணைவேள்விப்பயன்.

ப. விருநதோமபலாகியவேளவியினபயனினனவளவிறறெனபதோாள வுடைததனறததறகவவிருநதினறகுதியளவேயளவெனறவாறு.

வி. ஐமபெருவேளவியினுெனறுகவினவெளவியெனறும-பொருளளவு தானசிறிதாயினுநதககாாகைபபடடககாலவானசிறிதாயபபேராககுமாகவி

வினைத்துணைத்தென்பதொன்றில்லையென்றுங்கூறினார்- இதனாலிருமையும்பயத்தற்குக்காரணங்கூறப்பட்டது.

பு. (இனை-ன்) எ-இ-ள். வேள்வி-(விருந்தோம்பலாகிய) யாகத்தின், பயன்-பிரயோசனமானது, இனைத்துணைத்து-இத்தன்மை அளவையுடையது, என்பதொன்றில்லை-என்றுசொல்லக்கிடந்தது ஒன்றுமில்லை, விருந்தின்றுணைத்துணை-(அதற்கு அந்த) விருந்தின்(குணத்தகுதி) அளவே அளவு, எ-று.

வி. ஒண்பிரமம்வேதமோதுதலோமம்வளர்த்த
லெண்டெய்வமீதல்பலியேபூத மெண்டொடியீ
ரொண்ணீர்க்கடனுறலேபிதிர்விருந்தோம்ப
லண்ணீர்மைமானுடயாகம், என்றுசொல்லப்பட்டஐம்பெருவேள்வியிலே, இது ஒன்றானதினாலேவேள்வியென்றும், உபகாரஞ்செய்யப்பட்டபொருளின் அளவுசிறிதானாலும், அது நல்லோர்கைப்படுமானால் அந்தஅறத்தின்பயன் ஆகாயமுஞ் சுருங்கும்படிவிரிபுமாதலால், இனைத்துணைத்தென்பதொன்றில்லையென்றுஞ்சொன்னார். நல்லோர்கைப்பட்டஉபகாரப்பயனுக்கு, அளவில்லையென்றதற்குஉதாரணம், நாலடியார்,

உறக்குந் துணையதோராலம்வித்தீண்டி
யிறப்பநிழற்பயந்தா அங்கறப்பயனுந்
தான்சிறிதாயினுந் தக்கார்கைப்பட்டக்கால்
வான்சிறிதாப்போர்த்துவிடும், எனக்காண்க. இதினாலே, இகபர இன்பங்கள் இரண்டும்பெறுதற்குக்காரணஞ்சொல்லப்பட்டது.

இனிவேறுரைநுரை. விருந்தோம்பலாகிய அறத்தின்பயனுக்கு அளவில்லை, (ஆயினும்)விருந்தின்றுணைத்துணை-(ஒருவன் செய்யப்படும்) விருந்தும் (அதனையுண்ணும்) விருந்துமாகிய இரண்டின்தகுதி அளவே அதற்கு அளவு, எ-று.

இதற்கு,வி. இரட்டுறமொழிதலென்னும் உத்தியைச்சார்ந்து, விருந்து என்றது, இங்கேபோசனத்துக்கும், விருந்தினனுக்குங்,கொள்ளக்கிடந்தது. ஒருவன், (எவ்வகைப்பட்ட விருந்தினைச்செய்து,எவ்வகைப்பட்டஉபசாரத்தோடேகூட, எவ்வகைப்பட்ட)விருந்தினனை,உண்பிப்பானோ,அவ்வகைஅள

விற்பயன்கொள்வானாதலால், விருந்தின்றுணைத்துணையென்றுர். புதிதாகவந்தவனுக்கிடப்படும்போசனத்துக்குவிருந்தென்றுவழங்குதற்கு உதாரணம்,

வெண்ணெயோ விதுரனிட்டவிருந்தையோ வேலைசூழ்ந்த
மண்ணையோவுண்டு முன்னாள்வருடசிதீர்ந்த மாயோன்,

எனவருதல்காண்க. வேள்வி, அறம். இணைத்துணைத்தென்பதொன்றில்லையென்றதற்குவிசேடவுரையுமிக்குறளுக்குக்கருத்துரையும்மேற்சொல்லியவையேகொள்க.

அச. பரிந்தோம்பிப்பற்றற்றேமென்பர்விருந்தோம்பி
வேள்வித்தலைப்படாஅதார்.

ப. எது-நிலையாபொருளகளைவருநதிககாததுபபினனதனையிழநது பொழுதியாமபறறுககோடிலமாயினேமெனறிரஙகுவாபபொருளானவிருநதினையோமபிவேளவிபபயனையெயதுமபொறியிலாரெனறவாறு.

வி. ஈடடியவொணபொருளைககாததலுமாஙகேகடுநதுனபமாகவிறபரிநதோமபியெனறா-வேளவியாகுபெயா.

பு. (பரி-ர்) எ-இ-ள். பரிந்தோம்பி-(நிலையில்லாப்பொருள்களை)வருந்திக்காத்தும்,பற்றற்றேமென்பர்-(இப்பொழுது அவற்றைஇழந்துபோய்) நிராதரவானேம் என்றுபுலம்புவர், விருந்தோம்பி-(அந்தப்பொருள்களாலே) விருந்தினைப்பாதுகாத்து, வேள்வி-அந்தஉபகாரத்தின்பிரயோசனத்தை, தலைப்படாதார்-பொருந்தாதவர், எறு.

வி. பற்று,ஊன்றுகோல். அது,இங்கேஉவமையாகுபெயராய்நின்றது. புலம்புவரென்றது, பற்றற்றேமென்பர், என்றசொல்லியினாலே, பெறப்பட்டது. வேள்வி,காரணஆகுபெயர். ஈட்டலுந்துன்பமற்றீட்டியவொண்பொருளைக்

காத்தலுமாங்கேகடுந்துன்பம், என்பாராதலால், பரிந்தோம்பியென்றுர். பரிந்தோம்பாதுபற்றறுதலைத்தழுவிநின்றதாகலின்,இறந்ததுதழுவிய எச்சஉம்மைகுறைந்துநின்றது.

அ௯. உடைமையுளின்மைவிருந்தோம்பலோம்பா
மடமைமடவார்கணுண்டு.

ப. எது - உடைமைககாலததினமையாவதுவிருநதோமபலயிகழம பேதைமையஃதறிநதாரமாடடுளதாகாது பேதையாரமாடடேயுளதாமெனறவாறு.

வி. உடைமைபொருளுடையனாநதனமையபபொருளாறகொளளுமபயனையிழபபித துடைமையையினமையேயாககலின மடமையயினமையாகவுபசரிததார-பேதைமையானவிருநதோமபலயிகழிறபொருணினறவழியுமதனாறபயனிலலையெனபதாம-இவவிரணடுபாடடானுமவிருநதோமபாவழிபபடுமகுறறஙகூறபபடடது.

பு. (உடை-டு)எ-இ-ள்.விருந்தோம்பலோம்பாமடமை-விருந்தோம்பலாகியதருமத்தைப்பேணுதபேதைமையானது, உடைமையுளின்மை - பொருளுடையனுயிருக்குங்காலத்திலே தானேதரித்திரமாம், அது-அந்தபபேதைமையானது,மடவார்கணுண்டு- அறிவிலலாதவர்களிடத்திலேஉள்ளதாம்,எ று.

வி. உடைமை, பொருளுடையவனுயிருக்குந்தன்மை. அந்தப்பொருளாற்பெறப்படும்பிரயோசனததைக்கெடுத்து, ப்பொருளுடைமையைப்பின்பு இல்லாமையாகவேசெயயுமாதலாலே, காரணமாகியமடமையைககாரியமாகிய இன்மையாக உபசரித்தார். அதுவென்னுஞ்சுட்டுப்பெயர்வருவித்துரைக்கப்பட்டது. இப்படிச்சொன்னதினுலே, பொருளுணடானபொழுதே, விருந்தோம்புதலாகியதருமத்தைத்தினந்தோறுஞ்செய்யாவிடின், அந்தபொருளாற்பயனில்லையென்பதுபெறப்பட்டது. இவையிரண்டுபாட்டாலும், விருந்தோம்பாதபோது உண்டாகுங்குற்றஞ்சொல்லப்பட்டது.

௯௦. மோப்பக்குழையுமனிச்சமுகந்திரிந்து
நோக்கக்குழையும்விருந்து.

ப. எது - அனிசசபபூமோநதுழியனறிககுழையாதுவிருநதினாமுகமவேறுபடடுநோககககுழைவொனறவாறு.

வி. அனிசசமாகுபெயா - செயமைககடகணடுழியினமுகமுமதுபறறிநணணியவழியினசொலலுமவைபறறியுடனபடடவழிநனறுறறலுமெனவிருநதோமபுவாரகதினறியலமையாத மூனறனுணமுதலாயவின முகமிலவழிசசெயமைககணணேவாடிநீஙகு மாதவிறறீணடியவழியலலதுவாடாத வனிசசபபூவி

னும்விருந்தினர்மெல்லியரென்பதாம் - இதனால்விருந்தோம்புவார்க்குமுதற்க ணின்முகம்வேண்டுமென்பதுகூறப்பட்டது.

பு. (மோப்-து) எ-இ-ள். அனிச்சம்-அனிச்சப்பூவானது, மோப்ப-மோந்துபார்க்க, குழையும்-வாடும், விருந்து-விருந்தினனானவன், முகந்திரிந்துநோக்க-(விருந்துசெய்பவன்) முகம்வேறுபட்டுப்பார்க்க, குழையும்-வாடுவான், எ-று.

வி. தூரத்திலேபார்த்தபொழுதேஇனியமுகமும், அதினுலேகிட்டியபொழுது, இனியசொல்லும், அவரோடுடன்பட்டபோது நன்றுசெய்தலுமாகியமூன்றும், விருந்துசெய்பவர்க்குஇல்லாமற்கூடாதவையாம். இவற்றுள்முதலாகியஇனியமுகமில்லாதபோது, விருந்தினர்கண்டுமனங்குழைந்துதூரத்திலேதானேவிலகிப்போவார் ஆதலாலே, தொட்டால்வாடுகின்ற அனிச்சப்பூவினும்விருந்தினர்மெல்லியரென்பதாம். இது குறிப்பினாலே, அதனிலும் இதுஉயர்ந்ததென்று உயர்வுதோன்றநின்றவேற்றுமையென்னும்அலங்காரம். கூற்றினுங்குறிப்பினுமொப்புடையிருபொருள்வேற்றுமைபடவரின்வேற்றுமையதுவே. என்னும், அணியியற்சூத்திரநோக்கிக்காண்க. இதினாலேவிருந்தோம்பவிலக்கணஞ்சொல்லப்பட்டது. இதனுள் விருந்தோம்புவார்க்குமுதற்கண் இனியமுகமவேண்டுமெனவே, வருகின்ற அதிகாரம் இனியவைகூறலாதலால், அதிகாரமுறையும்விளங்கிற்று. என்னெனின், இனியமுகத்தோர்சொல்பவை, இனியசொற்களேயாதலால், எனக்காண்க. இனிமுகந்திரிந்து நோக்கக்குழையும்விருந்தென்பதற்கு, விருந்தோம்பவிடத்து உபசாரஞ்சிறிதுகுறையினும்மலர்ந்தமுகத்தினனாகவந்த விருந்தினனது முகம்வேறுபட்டுப்பார்ப்பதினாலே விருந்தோம்பலாகிய தருமம்வாடுமென்பதே, சிறந்துகாட்டிற்றுப் போலும். இதற்கு விருந்தென்பதைமும்மடியாகுபெயராகக்கொள்க.

## ம. அதிகாரம்.

# இனியவைகூறல்.

---

ப-ம. இனியவைகூறல-அஃதாவதுமனததினகணுவகையைவெளிபபடுபபனவாயவினியசொறகளைசசொலலுதல-இதுவுமவிருநதோமபுவாாககினறியமையாதாகலினவிருநதோமபலினபினவைககபபடடது.

பு-ம். (இ-ல்) அதாவது, மனசிலே இருக்கின்றமகிழ்ச்சியைவெளிப்படுப்பவையாகிய இனியசொல்லுக்களைச்சொல்லுவதைச்சொல்வது. அதிகாரமுறைமேலேசொல்லப்பட்டது.

கூக. இன்சொலாலீரமளைஇப்படிறிலவாஞ்
செம்பொருள்கண்டார்வாய்ச்சொல்.

ப. எது-இனசொலாவனவனபொடுகலநதுவஞசனையிலவாயிருககினறவறததினையுணாநதாாவாயிறசொறகளெனறவாறு.

வி. ஆல அசைநிலை-அனபொடுகலததல அனபுடைமையைவெளிபபடுததல - படிறினமைவாயமை -மெயயுணாநதாாநெஞசிறகெலலாஞசெமமையுடைததாயததோனறலிறசெமபொருளெனபபடடது-இலவாஞசொலலெனவினையுமவாயெனவேணடாதுகூறினா- தீயசொறபயிலாவெனபதறிவிததறகு- இதனானினசொறகிலககணஙகூறபபடடது.

பு. (இன்-ல்) எ-இ-ள். இன்சொல்-இனியசொல்லானவை, ஈரமளைஇ-அன்போடுகலந்து, படிறிலவாம்-பொய்மை இல்லாதனவாம், செம்பொருள்கண்டார்வாய்ச்சொல் -அறப்பொருளை அறிந்தவர்வாய்ச்சொற்களாம், எறு.

வி. ஆல், அசைநிலையிடைச்சொல். அன்பொடுகலத்தல், அன்புடையகுணத்தை வெளிப்படுத்துவது. தருமமானது, மெய்யுணர்ந்தவருடையநெஞ்சினுக்குஎல்லாஞ்செம்மையுடையதாய்த்தோன்றுவதினாலே, செம்பொருளென்றார். ஆம்என்னும்பெயரெச்சம், சொல்என்பதனொடுமுடிந்தது. செம்பொருள்கண்டார்சொல்லெனவே அமையும், வாய் எனவேண்டாதுசொன்னாரெனின், அவர்களுடையவாய்க்குத்தீயசொற்பழக்கம்இராதென்பது தெரிவிப்பதற்குஎனக்கொள்க. எப்படியெனின், இப்படிவேண்டாதுசொல்லுஞ்சொல்லுக்கு, விதப்புக்கிளவியென்றுபெயர்; சூத்திரம், விதப்புக்கிளவிவேண்டிய

துவிளக்கும் என்பாராதலால், அப்படிப்பொருள்கொள்ளப் பட்டது. விதப்பு, அதிகம். இனி இதற்கு, செம்பொருள்கண் டார்வாய்ச்சொலின்சொல்லென்றுகூட்டி, அறப்பொருள்உண ர்ந்தார்வாயாற்சொல்லுமின்சொலாவன, அன்போடுகலந்து பொய்மைஇல்லாதனவாம், எனமுடித்துப்பொருள்கொளினு ம்அமையும். வாய்ச்சொல், உருபுதொக்கமூன்றாம்வேற்றுமை த்தொகை. இன்சொல், பண்புதொகை. வாய்ச்சொல்லின்சொ ல், என இரண்டுங்கூட்ட, வினைத்தொகை. இவர்,

கல்லாதாரொட்பங்கழிநன்றாயினுங்

கொள்ளாரறிவுடையார், என்று சொல்லுவர் ஆதலாற், க ல்லாதார் அறநிலை உணராதுமனமாசுடையராதலாலே, அவர்வா ய்ச்சொல்லும்அன்போடுகலந்துபொய்மை இல்லாதனவாயி னும், அவற்றை இன்சொலெனல்கூடாவெனவிலக்குதற்பொரு ட்டு, மேற் செம்பொருள்கண்டார்வாய்ச்சொல்லெனவிசேடி த்தார் எனக்கொள்க. இதனாலே இன்சொல்லுக்கு இலக்கணஞ் சொல்லப்பட்டது.

கூஉ. அகனமர்ந்தீதலினன்றேமுகனமர்ந் தின்சொலனாகப்பெறின்.

ப. எது-நெஞசுவநதொருவாககுவேணடியதொருபொருளைககொடுத தலினுநனறுகணடபொழுதேமுகமினியனாயத னோடினியசொலலையுமுடைய னாகபபெறினெனறவாறு.

வி. இனமுகததோடுகூடியவினசொலீதலபோலபபொருளவயததூன றிததனவயததாயினுமறநெஞசுடையாாககலலதியலபாக வினமையினதனி னுமரிதெனனுஙகருததானினசொலனாகபபெறினெனறா.

பு. (அக-ன்)எ-இ-ள். முகனமர்ந்து-(கண்டபொழுதே இனிய) முகம்பொருந்தி, இன்சொலனாகப்பெறின்-(அதனோ டேகூட) இனியசொல்லையும் உடையவனாகப்பெற்றால், (அது) அகனமர்ந்து-மனம்பொருந்தி, ஈதலினன்று-(ஒருவர்க்குவே ண்டியதொருபொருளைக்) கொடுப்பதினுநன்மையுடையது, எ-று.

வி. இன்முகத்தோடுகூடிய இன்சொல்லானது, ஈகையை ப்போலப்பொருளின்வசப்படாது தன்வசப்படுவதானாலும்,

தருமசிந்தனை உடையவர்களுக்கே அல்லாமற் சுபாவத்திலே இல்லாதவர்களுக்கு, அகனமர்ந்து ஈதலினும் இது வரியதென்கிறகருத்தைக்கொண்டு, முகனமர்ந்தின்சொலனாகப்பெறின் என்றார். ஏகாரம், அசைநிலை. இனி, முகனமர்ந்தின்சொலனாகப்பெறின், அது, அகனமர்ந்தீதல்போலநன்றெனக்கொளினும் அமையும்.

௯௩. முகத்தானமர்ந்தினிதுநோக்கியகத்தானா
மின்சொலினதேயறம்.

ப. எ-து - கண்டபொழுதே முகத்தான் விரும்பி இனிதாக நோக்கிப் பின்னை நண்ணியவழி மனத்துடனாகிய வினியசொற்களைச் சொல்லுதலின்கண்ணதே யறம் எ-று.

வி. நோக்கியென்னும் வினையெச்சம் இன்சொலென வடையடுத்து நின்ற முதனிலைத்தொழிற்பெயரொடு முடிந்தது. ஈதலின்கண்ணதன்றென்றவாறு. இவையிரண்டுபாட்டானும் இன்முகத்தோடு கூடிய வின்சொல் முன்னே பிணித்துக்கோடலின் விருந்தோம்புதற்கட் சிறந்ததென்பது கூறப்பட்டது.

பு. (முக-ம்) எ-இ-ள். முகத்தானமர்ந்து-(கண்டபொழுதே) முகத்தினாலேபொருந்தி, இனிதுநோக்கி-இனிதாகப் பார்த்து, (பின்புகிட்டிவந்தபோது) அகத்தானாம்-மனத்தோடுபட்டதாகிய, இன்சொலினதேயறம்-இனியசொற்களைச்சொல்லுதலிடத்தையுடையதே அறமாவது, (ஈதலிடத்தையுடையதன்று,) எ-று.

வி. ஈதலிடத்தையுடையதன்றென்பது, குறிப்புஎச்சம். நோக்கியென்றவினையெச்சமானது, இன்சொல்என்பதனை, இனியசொற்களைச் சொல்லுதல் எனவிரித்துச் சொல்லென்ற முதனிலைத்தொழிற்பெயர்கொண்டுமுடிந்ததெனக்கொள்க. இவையிரண்டுபாட்டாலும், இன்முகத்தோடுகூடிய இன்சொல், விருந்தோம்பலென்னும் அதிகாரத்திலேசொல்லியபடி, விருந்தோம்புதலுக்குச்சிறந்தது என்பது, சொல்லப்பட்டது. இனியிதற்குநோக்கியென்னும் வினையெச்சத்தை, எச்சத்திரிபு எனக்கொண்டு, அது ஆம்என்னும் பெயரெச்சத்தைக்கொண்டுமுடிய, அப்பெயரெச்சம், இன்சொலினது, என்னுங்குறிப்புமுற்றின்பகுதியாகி, அடையடுத்துநின்றஇன்சொல், என்னும்பெயரோடுமுடிந்ததெனக்கொண்டு, முகத்தினாலே அமர்ந்தினிது

நோக்கினதினாலே, மனத்தோடுபட்டுவந்ததாகிய இனியசொல்லை உடையதே அறமாவது, எனக்கொளினும் அமையும்.

௯௪. துன்புறூஉந் துவ்வாமையில்லாகும்யார்மாட்டு
மின்புறூஉமின்சொலவர்க்கு.

ப. எ-து-எலலாாமாடடுமினபததைமிகுவிககுமினசொலலையுடையாாககுததுனபததைமிகுவிக்குநலகுரவிலலையாமெனறவாறு.

வி. நாமுதலியபொறிகளசுவைமுதலியபுலனகளைநுகராமையுடைமையிறறுவவாமையெனறாா-யாாமாடடுமினபுறூஉமினசொலவாாககுபபகையுநொதுமலுமினறியுளளதுநணபேயாமாகவேயவரெலலாசசெலவமுமெயதுவரெனபதுகருத்து.

பு. (துன்-கு) எ-இ-ள். யார்மாட்டும்-எல்லாரிடத்தும், இன்புறூஉம்-இன்பத்தை அதிகப்படுத்துகின்ற, இன்சொலவர்க்கு-இனியசொல்லை உடையவர்களுக்கு, துன்புறூஉம்-துன்பத்தை அதிகப்படுத்துகின்ற, துவ்வாமை-தரித்திரமானது, இல்லாகும்-இல்லையாம், எறு.

வி. நாமுதலாகிய இந்திரியங்கள், இரசம்முதலாகியபலன்களை அநுபவியாதிருப்பதை உடையது, தரித்திரமாதலால் அதைத்துவ்வாமையென்றார். துப்பு, அநுபவம் துவ்வாமை, அநுபவியாமை. இப்படிச்சொன்னதினாலே, எல்லாரிடத்திலும்மிகுந்தஇன்பத்தைஉண்டாக்குகிற இன்சொலுடையவர்களுக்குப்பகையும்பொதுமையும் இல்லாமல், நட்பேஉளதாம். உளதாகவே, எல்லாச்செல்வமும்பொருந்துவார்கள் என்பதாம்.

௯௫. பணிவுடையனின்சொலனாதலொருவற்
கணியல்லமற்றுப்பிற.

ப. எ-து-ஒருவனுககணியாவதுதனனாறறாழப்படுவாாகடடாழசசியுடையனாயெலலாாகணணுமினியசொலலையுடையனாதலிவையிரணடுமினறிமெயககணியுமபிறவணிகளணியாகாவெனறவாறு.

வி இனசொலலாறறனைமாகவிறபணிவுடைமையுடனகூறினா-மறறைநிலை-வேறறுமையுடைமையாறபிறவெனவுமிவைபோலபபேரழகுசெயயாமையானலலவெனவுஙகூறினாா - இவையிரணடுபாடடானுமினியவைகூறுவாாககிமமைபபயனகூறபபடடது.

பு- (ப-ற) எ-இ-ள். ஒருவர்கணி-ஒருவனுக்கு ஆபரணமாவது, பணிவுடையன்-(தன்னாலே தாழப்படுவாரிடத்திலே)

தாழ்வுடையவனாகி,இன்சொலனாதல்-(எல்லாரிடத்திலும்) இனியசொல்லை உடையவனாவது,(இவையிரண்டுந்தவிர) பிற-(வேறேதேகத்திலேதரிக்கப்பட்ட) ஆபரணங்கள், அல்ல-ஆபரணங்கள் அல்ல, எ-று.

வி. பணிவுடைய இன்சொல்லுக்கு இனமானதினாலே,பணிவுடைமையையும் அதனோடேசேர்த்தும்;இவையிரண்டுந்தனக்கு ஐயிக்கியப்பட்டிருப்பதுபோலாகாமல்வேறுபட்டே இருப்பதால், ஆபரணங்களைப்பிற என்றும்; இவற்றைப்போல உயிர்க்கு அழகுசெய்யாமையாலும், ஒருவன்கற்றவர்சபையிலேஎல்லா ஆபரணங்களையும்பூண்டு இருமாந்துகடுஞ்சொற்சொல்லுவானானால் அவனைப்புறம்போக்கிக் கற்றவர்கண்ணாலேநோக்கவும்நோக்கார், ஆதலால் அப்பொழுது அந்த ஆபரணங்களிருந்தும் அவனுக்குஒருசிறப்புமில்லாததினாலும்,அணியல்லவென்றுஞ்சொன்னார். மற்று, அசைநிலை. அணியென்பது,செய்யுளிருமருங்குஞ்சென்றுபொருள்முற்றுவதினாலே,தரப்பிசைப்பொருள்கொளாகக்கொள்க. இவையிரண்டுபாட்டாலும் இன்சொலுடையார்க்குவரும்இம்மைப்பயன்சொல்லப்பட்டது.

௯௬. அல்லவைதேயவறம்பெருகுநல்லவை
நாடியினியசொலின்.

ப. எது-பொருளாறபிறாககு நனமைபயககுஞசொறகளைமனததாலாராயநதினியவாகவொருவனசொலலுமாயினவனுககுபபாவஙகடேயவறமவளருமெனறவாறு.

வி. தேயதலதனபகையாகியவறமவளாதவிறறனககுநிலையினறிமெலிதல--தவததினமுனனிலலாதாமபாவமெனபது மிபபொருடடு- நலலவைநாடிசசொலலுஙகாலுஙகடியவாகசசொலவினுகாதெனபதாமிதனானமறுமைபபயனகூறபபடடது.

பு. (அல்-ன்)எ-இ-ள். நல்லவை-(பொருளாற்பிறருக்கு) நன்மைதரப்படுஞ்சொற்களை,நாடி-(மனசினாலே)ஆராய்ந்து, இனியசொலின்-இனிமையவாக (ஒருவன்)சொல்லுவானானால (அவனுக்கு)அல்லவைதேய-பாவங்கள்தேய்ந்துபோம்படியாக, அறம்பெருகும்-தருமம்வளரும், எ-று.

வி. தேய்தலாவது, தனக்குப்பகையாகிய அறம்வளர்வதி ஞலே, நிலை இல்லாமலே, மெலிந்துபோவது. அல்லவைதேய அறம்பெருகுதற்குஉதாரணம்,

விளக்குப்புகவிருண்மாய்ந்தாங்கொருவன்
றவத்தின்முன்னில்லாதாம்பாவம், எனக்காண்க. நல்ல வைநாடிச்சொல்லும்போதுங் கடுஞ்சொல்லாற்சொல்லலாகா தென்பதாம். இதிஞலே மறுமைப்பயன்சொல்லப்பட்டது.

கூஎ. நயனீன்றுநன்றிபயக்கும்பயனீன்று
பண்பிற்றலைப்பிரியாச்சொல்.

ப. எது - ஒருவனுக்கிம்மைக்கு நீதியையுமுண்டாக்கிமறுமைக்கறத் தையும்பயக்கும்பொருளாற்பிறர்க்கு நன்மையைக்கொடுத்தினிமைப்பண்பினீ ங்காதசொல்லென்றவாறு.

வி. நீதியுலகத்தோடுபொருந்துதல்- பண்பென்றதிவண்டதிகாரத்தானி னிமைமேனின்றது-தலைப்பிரிதலொருசொன்னீர்மைத்து.

பு. (நய-ல்) எ-இ-ள். நயனீன்று - (ஒருவனுக்கு இம் மைக்கு)நீதியையும்உண்டாக்கி,நன்றிபயக்கும்-(மறுமைக்கு) அறத்தையுந்தரும், பயனீன்று-(பொருளாற்பிறர்க்குநன்மை யாகிய) பிரயோசனத்தைத்தந்து, பண்பிற்றலைப்பிரியாச்சொ ல்-(இனிமையாகிய)குணத்திலேநின்றும்நீங்காதசொல், எ-று.

வி. நயன், உலகத்தோடுபொருந்துகின்றநீதி. நயம்,நய ன் என மொழி இறுதிப்போலியாய்நின்றது. பண்பு என்றது, இங்கே அதிகாரத்திஞலேஇனிமைப்பண்பாயிற்று. தலைப்பிரி தல், பிரிதல்; இது,இரண்டுசொற்போலத்தோன்றிஞலும் ஒரு சொல்லின்தன்மையையுடையது; அல்லது தலையென்பது, இட மெனக்கொண்டு,இடத்தில்நின்றுநீங்குதல்எனினும் அமையும்.

கூஅ. சிறுமையுணீங்கியவின்சொன்மறுமையு
மிம்மையுமின்பந்தரும்.

ப. எது-பொருளாற்பிறர்க்குநோய்செய்யாதவினியசொல்லொருவனு க்கிருமையினுமின்பத்தைப்பயக்குமென்றவாறு.

வி. மறுமையினபமபெரிதாகலினமுறகூறபபடடது-இமமையினபமாவதுலகநதனவயததாதலானலலனவெயதியினபுறுதல - இவையிரணடுபாடடானுமிருமைபபயனுமொருஙகெயதுதலவலியுறுததபபடடது.

பு. (சி-ம்)எ-இ-ள். சிறுமையுணீங்கியவின்சொல்-(பொருளாற்பிறர்க்குச்செய்யுந்) துன்பப்பிரயோசனத்திலேநின்று நீங்கியஇனியசொல்லானது, மறுமையுமிம்மையுமின்பந்தரும்-(ஒருவனுக்கு) இம்மைமறுமையென்கின்ற இருமையிலும் இன்பத்தைத்தரும், எறு.

வி. சிறுமை, துன்பம்; அது, கடுஞ்சொல்லின்பயனாதலாற்சிறுமையுள் நீங்கிய இன்சொல்லென்றார். மறுமை இன்பம்பேரிதாதலால்அது,முன்சொல்லப்பட்டது.இம்மை இன்பமாவது, இன்சொலுடையானுக்கு உலகந்தன்வசப்படுதலாலே, நல்லவைகளை அடையப்பெற்று அநுபவித்து இன்பப்படுவது. இவையிரண்டுபாட்டாலும்இருமைப்பயன்முழுமையும் பெறுவது, வலியுறுத்தி (பலப்படுத்திச்) சொல்லப்பட்டது,

௯௯. இன்சொலினிதீன்றல்காண்பானெவன்கொலோ
வன்சொல்வழங்குவது.

ப. எது - பிறாகூறியவினசொறறனககினபமபயததலையநுபவிததறிகிணறவனதுநிறகபபிறாமாடடுவனசொலலைசசொலலுவதெனனபயனகருதியெணறவாறு.

வி. இனிதெனறதுவினைககுறிபபுபபெயா - கடுஞசொறபிறாககுமினனாதாகலினதுகூறலாகாதெனபதுகருதது.

பு. (இன்-து)எ-இ-ள். இன்சொல்-(பிறர்சொல்லிய)இனியசொல்லானது, இனிதீன்றல்-(தனக்கு)இன்பந்தருவதை, காண்பான்-(அநுபவித்து)அறியவன், (அதைவிட்டுப்பிறரிடத்தில்) வன்சொல்வழங்குவது-கடுஞ்சொல்லைச்சொல்வது, எவன்கொலோ-என்ன (பிரயோசனத்தைக்குறித்தோ,) எறு.

வி. கொல் என்றது, அசைநிலை. கடுஞ்சொல்லானது, பிறருக்கும் இன்பமாகாது, ஆதலால் அது சொல்லலாகாதென்பதுகருத்து.

௱. இனியவுளவாகவின்னாதகூறல்
கனியிருப்பக்காய்கவர்ந்தற்று.

ப. எ-து-அறமபிறககுமினியசொறகளுநதனககுளவாயிருககவவறறை க்கூறு துபாவமபயககுமினனாதசொறகளையொருவனகூறுதலினியகனிகளுநத னகைககணுளவாயிருககவவறறைநுகராதினனாதகாயகளை நுகாநததனோடொ ககுமெனறவாறு.

வி. கூறுதலெனபதனாறசொறகளெனபதுபெறறும - பொருளவிசேடி தது நினறபணபுகளுவமைககணணுஞ்செனறன-இனியகனிகளெனறதவவையு ணடநெலவிககனிபோலவமிழதானவறறை-இனனாதகாயகளெனறது - காஞ்சி ரஙகாயபோலநஞசானவறறை-கடுஞசொறசொலலுதனமுடிவிறறனககேயின் னாதெனபதாம - இவையிரணடுபாடடானுமினனாதகூறலினகுறறஙகூறபபட டது.

பு. (இ-று) எ-இ-ள். இனிய-(தருமத்தைஉண்டாக்குகின்ற) இனிமையையுடையசொற்களும், உளவாக-(தனககு) உண்டாயிருக்க, (அவற்றைவிட்டுப்பாவத்தையுண்டாக்குகின்ற) இன்னாத- இன்பமில்லாதவையாகியசொற்களை, கூறல்-(ஒருவன்) சொல்வது, கனியிருப்ப-(இனிய) கனிகளும்(தன்கையில்) உண்டாயிருக்க, (அவற்றைப்புசியாமல்) காய்கவர்ந்தற்று-(இனிமையில்லாத) காய்களைப்புசித்ததோடேயொக்கும், எ-று.

வி. கூறல்என்பதினாலே, சொற்களென்பதுபெற்றோம். உபமேயமாகியசொற்களைவிசேடித்துநின்ற இனிமை இன்னாமை என்னும்பண்புகள், உபமானமாகிய கனி காய் என்பனவற்றையும் விசேடித்துநின்றன. இங்கே உபமான அடையாகிய இனிமை இன்னாமைகள், அமிர்தத்தையும்விடத்தையும் ஒத்தபண்புகள். கடுஞ்சொல்லைச்சொல்வது, முடிவிலேதனக்கேதீங்குதருமென்பதுகருத்து. இவையிரண்டுபாட்டாலுங்கடுஞ்சொற்சொல்லுதலின்குற்றஞ்சொல்லப்பட்டது.

---

௰௧. அதிகாரம்.

# செய்நன்றியறிதல்.

---

ப-ம. செயநனறியறிதலஃதாவது - தனககுபபிறாசெயதநனமையைமறவாமை - இனியவைகூறியிலலறமவழுவாதாாககுயதியிலகுறறஞசெய நனறிகோறலையாகலினதனைபபாதுகாததுககடிதறபொருடடிஃதினியவை கூறலினபினவைககபபடடது.

பு-ம். (செய்-ல்) அதாவது-தனக்குப் பிறர்செய்தநன்மையைமறவாமல் அறிவதைச்சொல்வது. இனியசொற்களைச்சொல்லி இல்லறத்திலேவழுவாதவர்க்கு ஒழியாதகுற்றமாவது செய்நன்றிமறப்பதேயாதலால், அதைப்பாதுகாத்துவிலக்கு இறநிமித்தம், இனியவைகூறலின்பின் இதுவைக்கப்பட்டது.

௱௧. செய்யாமற்செய்தவுதவிக்குவையகமும்
வானகமுமாற்றலரிது.

ப. எது-தனககுமுனனொருதவிசெயயாதிருககவொருவனபிறனுககுச செயதவுதவிககுமணணுலகுமவிணணுலகுங கைமாறாககொடுததாலுமொததலரிதெனறவாறு.

வி. கைமாறுகளெலலாஙகாரணமுடையவாகவிறகாரணமிலலாவுதவிககீறாருவாயின-செயயாமைசசெயதவெனறுபாடமோதிமறிநதுதவமாடடாமையுளளவிடததுசசெயதவுதவியெனறுரைபபாருமுளா.

பு. (செய்-து)எ-இ-ள். செய்யாமல்-(தனக்குமுன்னொரு உதவி) செய்யாதிருக்க, செய்தவுதவிக்கு-(அவன்பிறன் ஒருவனுக்குச்) செய்யப்பட்ட உதவிக்கு, வையகமும்வானகமும்-மண்ணுலகத்தையும் வானுலகத்தையும், (கைமாறாகக்கொடுத்தாலும்) ஆர்றலரிது-ஆர்றாது, எ-று.

வி. கைமாறுதவிகள் எல்லாங்காரணமுடையவை, இது காரணம் இல்லா உதவிஆதலால், ஆர்றலரிதென்றார். செய்யாமைச்செய்தவுதவியென்றுபாடமோதி, மறுபடி உதவமாட்டாமல் இருந்த இடத்திற்செய்த உதவியென்றுசொல்வாரும் உண்டு.

௱௨. காலத்தினாற்செய்தநன்றிசிறிதெனினு
ஞாலத்தின்மாணப்பெரிது.

ப. எது-ஒருவனுககிறுதிவநதவெலலைககணொருவனசெயதவுபகாரந தனனைநோககசசிறிதாயிருநததாயினுமககாலநதனனைநோககநிலவுலகததினுமிகபபெரிதெனறவாறு.

வி. அககாலநோககுவதலலதுபொருணோககலாகாதெனபதாம-காலததினாலெனபதுவேறறுமையயககம.

பு. (கா-து) எ-இ-ள். காலத்தினால்-(ஒருவனுக்கு ஆபத்துவந்த) காலத்திலே, செய்தநன்றி-(ஒருவன்) செய்த உபகா

ரம், சிறிதெனினும்-(அந்தஉபகாரத்தைப்பார்க்கச்)சிறிதாயிருந்தாலும், (அந்தக்காலத்தைக்குறிக்க) ஞாலத்தின்-நிலவுலகத்திலும், மாணப்பெரிது-மிகவும்பெரிதாம், எ-று.

வி. காலத்தில் என்பதற்குக் காலத்தினால் என ஆலுருபு, மயங்கிநின்றது, உருபுமயக்கம். காலத்தைக்குறிப்பதே அல்லாமற்பொருளைக்குறிக்கலாகாது, என்பதுகருத்து.

௱௩. பயன்றூக்கார்செய்தவுதவிநயன்றூக்கி
னன்மைகடலிற்பெரிது.

ப. எ-று-இவர்க்கிதுசெய்தாலின்னதுபயக்குமென்றாராய்தலிலராய்ச்செய்தவுதவியாகியவீரமுடைமையையாராயினதன்னன்மைகடலினுமிகப்பெரிதாமென்றவாறு.

வி. இவைமூன்றுபாட்டானுமுறையே காரணமின்றிச்செய்ததூஉங்காலத்தினாற்செய்ததூஉம்பயன்றூக்காச்செய்ததூஉமளவில்லவாதல்கூறப்பட்டன.

பு. (பய-று) எ-இ-ள். பயன்றூக்கார்-(இவர்க்கு இது செய்தால் இன்னதுபலிக்குமென்று) அந்தப்பயனை ஆராயாதவராகி.(ஒருவனுக்குச்)செய்தவுதவிநயன்-செய்தஉதவியினுடையநீதியை, தூக்கின்-ஆராய்ந்துபார்த்தால், நன்மைகடலிற்பெரிது-(அந்த) நன்மையானதுகடலினும்மிகப்பெரிதாம், எ-று.

வி. பயன்றூக்கார்என்னுமுற்றுவினை, இங்கேஎச்சவினையாய்நின்றது; வினைமுற்றேவினையெச்சமாகலுமென்னுஞ்சூத்திரநோக்கிக்காண்க. இவைமூன்றுபாட்டாலுமுறையாகவே, காரணமில்லாமற்செய்த உதவிக்கும், காலத்திற்செய்த உதவிக்கும், பயனை ஆராயாதுசெய்த உதவிக்கும், அளவில்லையென்பதுசொல்லப்பட்டது.

௱௪. தினைத்துணைநன்றிசெயினும்பனைத்துணையாக்
கொள்வர்பயன்றெரிவார்.

ப. எ-று-தமக்குத்தினையளவிற்றாகியவுபகாரத்தையொருவன்செய்தானாயினுமதனையவ்வளவிற்றாகக்கருதாதுபனையளவிற்றாகக்கருதுவர்அக்கருத்தின்பயன்றெரிவாரென்றவாறு.

வி. தினை--பனையென்பன சிறுமைபெருமைகட்குக் காட்டுவன சில அளவை-அக்கருத்தின்பயனாவது அங்ஙனங்கருதுவார்க்குவரும்பயன்.

பு. (தினை-ர்) எ-இ-ள். தினைத்துணை நன்றிசெயினும்-(தமக்குத்) தினை அளவு உபகாரத்தை (ஒருவன்)செய்தானானாலும், (அதை அந்த அளவாகநினையாமல்) பனைத்துணையாக்கொள்வர்-பனை அளவாக (மனதிலே) நினைத்துக்கொள்வர், பயன்றெரிவார்-அந்தநினைப்பின்பயனைத்தெரியத்தக்கவர், எ-று.

வி. தினைபனையென்பவை, சிறுமைபெருமைகளுக்குக் காட்டப்படுஞ்சில அளவு. அந்தநினைப்பின்பயனாவது, அப்படிநினைப்பவர்களுக்குவரும்பிரயோசனம்.

௱௫. உதவிவரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார்சால்பின்வரைத்து.

ப எது-கைமாறானவுதவி காரணத்தானும் பொருளானும் காலத்தானுமாகிய மூவகையானும் முன்செய்தவுதவியளவிற்றன்றதனைச் செய்வித்துக்கொண்டவர் தம்மமைதியளவிற்றென்றவாறு.

வி. சால்பெவ்வளவுபெரிதாயிற்றுதவியுமவ்வளவுபெரிதாமென்பார் சால்பின்வரைத்தென்றார் இவையிரண்டுபாட்டானுமூன்றுமல்லாதவுதவிமாத்திரமுமறிவார்க்குச்செய்தவழிப்பெரிதாமென்றுகூறப்பட்டது.

பு. (உத-து) எ-இ-ள். உதவி-கைம்மாறு உதவியானது, உதவிவரைத்தன்று-(காரணம்பற்றியும் பொருள்பற்றியுங்காலம்பற்றியுமுன்செய்த) உதவி அளவையுடையதன்று, உதவிசெயப்பட்டார்-அந்த உதவியைச்செய்யப் பெற்றுக்கொண்டவருடைய, சால்பின்வரைத்து-மேன்மையின் அளவைக்கொண்டிருக்கும், எ-று.

வி. மேன்மை எவ்வளவுபெரிதாயிற்றோ, உதவியும் அவ்வளவுபெரிதாமென்றுசொல்லவந்தவர், சால்பின்வரைத்து என்றார். உதவிவரைத்தன்று என்றதினாலே, முன் உதவி என்றது, கைம்மாறுஉதவியென்பதுபெற்றோம். இவையிரண்டுபாட்டானுமேற்சொல்லப்பட்டமூன்றும் அல்லாதகைம்மாறு உதவிமாத்திரமும்அறிவார்க்குச்செய்தபோதுபெரிதாமென்றுசொல்லப்பட்டது.

௱௬. மறவற்கமாசற்றார்கேண்மைதுறவற்க
துன்பத்துட்டுப்பாயார்நட்பு.

ப. எது-துனபககாலததுததனககுபபறறுககோடாயினாரதுநடபை விடாதொழிகவறிவொழுககஙகளிறகுறறமறறாரதுகேணமையை மறவாதொழிகவெனறவாறு.

வி. கேணமை-கேளாநதனமை-இமமைககுறுதிகூறுவாமறுமைக குறுதியுமுடனகூறினா.

பு. (மற-பு) எ-இ-ள். துன்பத்துள்-துன்பம்வந்தகாலத்தில், துப்பாயார்நட்பு-(தனக்கு) ஆதாரமாயினவருடையசிநேகத்தை, துறவற்க-விடாதிருக்க, மாசற்றார்கேண்மை-(அறிவுஆசாரங்களிலே) குற்றமற்றவருடையநட்பை, மறவற்க-மறவாதிருக்க, எ-று.

வி. துப்பு, ஊன்றுகோல். அதுபோலத்தளர்ச்சிவந்தபோதுதாங்கினார் என்றுசொல்லவந்தவர், துன்பத்துட்டுப்பாயார் என்றார். இவர்நட்பு இம்மைக்குஉறுதியென்றுசொல்லவந்தவர், மறுமைக்குறுதியாகிய, மாசற்றார்கேண்மையுமுடன்சொன்னார்.

௱௭. எழுமையெழுபிறப்புமுள்ளுவர்தங்கண்
விழுமந்துடைத்தவர்நட்பு.

ப. எது--தஙகணெயதியதுனபததைநீககினவருடையநடபினையெழுமையினையுடையதமமெழுவகைபபிறபபிலுநினைபபாநலலோரெனறவாறு.

வி. எழுமையெனறதுவினைபபயனறொடருமெழுபிறபபினையதுவளையாபதியுடகணடது--எழுவகைபபிறபபுமேலேயுரைததாம- விரைவுதோனறததுடைநதவரெனறா--இவையிரணடுபாடடாலுநனறிசெயதாரதுநடபுவிடலாகாதெனறதுகூறபபடடது.

பு. (எழு-பு) எ-இ-ள். தங்கண்-தம்மிடத்து, (அடைந்த) விழுமம்-துன்பத்தை, துடைத்தவர்நட்பு-நீக்கினவருடையசிநேகத்தை, எழுமை-எழுவகைப்பிறவிக்குணங்களையுடைய, எழுபிறப்பும்-(தமது) எழுவகைப்பிறப்பிலும், உள்ளுவர்-நினைப்பார் (நல்லோர்,) எ-று.

வி. எழுமை என்றது, வினைப்பயன்தொடரும்எழுவகைப்பிறவிக்குணங்களை, அது, வளையாபதியென்னும்இலக்கியத்திற்கண்டது. விரைவுதோன்றும்படியாகத் துடைத்தவரென்

ரூர்.

இனி இதர்குவேறுரை. தங்கண்-தமதுகண்களிலேநின்றும், வீழும்-விழுகின்ற, அம்-நீரை (கண்ணீரை,) துடைத்தவர்-போக்கினவருடைய, நட்பு-சிநேகத்தை, எழுமையெழுபிறப்புமுள்ளுவர்-எழுவகைப்பிறவிக்குணங்களையுடைய எழுவகைத்தோற்றங்களிலும் (சனனந்தோறும்) நினைப்பார், (நல்லோர்) எ-று.

இதர்கு-வி. வினையினல் எடுத்த உடம்புகளுக்கு அடுத்தகுணங்கள்முழுவதும்அமைந்திருப்பது அரிதாதலால், அவைமுழுதும் அமைந்தவெனச்சொல்லவந்தவர், எழுமையெழுபிறப்புமென்றும், தமதுஉள்ளத்திலேநின்றும்அளவிடக்கூடாமல் எழுந்ததுன்பத்தை ஒழித்தவரொன்றுசொல்லவந்தவர், அதன்காரியமாகியகண்ணீரைத் துடைத்தவரொன்றுஞ், சொன்னூர். இவையிரண்டுபாட்டாலும், உதவிசெய்தவருடையநட்பைவிடலாகாதென்றது, சொல்லப்பட்டது.

௱௮. நன்றிமறப்பதுநன்றன்றுநன்றல்ல
தன்றேமறப்பதுநன்று.

ப. எது-ஒருவனமுனசெயதநனமையைமறபபதொருவறகறனனறவனசெயததீமையைசசெயதபொழுதேமறபபதறனெனறவாறு.

வி. இரணடு மொருஙகேசெயயபபடடவழிமறபபது மறவாததுமவகுததுககூறியவாறு.

பு. (நன்-று)எ-இ-ள். நன்றி-(ஒருவன்செய்தஉதவியை, மறப்பது-(ஒருவன்)மறந்துவிடுவது, நன்றன்று-தருமம்அன்றும், நன்றல்லது-(அவன்பின்புசெய்த) தீமையை, அன்றே-அப்பொழுதே, மறப்பதுநன்று-மறந்துவிடுவதுதருமமாம், எ-று.

வி. இரண்டும் ஒருவனுலேசெய்யப்பட்டபோது, மறப்பதும், மறவாததுஞ், சொல்லியபடி.

௱௯. கொன்றன்னவின்னுசெயினுமவர்செய்த
வொன்றுநன்றுள்ளக்கெடும்.

ப. எது-தமககுமுனனொருநனமைசெயதவாபினகொனறுலொததவினனுதவறறைசசெயதாராயினுமவையெலலாமவாசெயதநனமையொனறனையுநினைககவிலலையாமெனறவாறு.

வி. தினைததுணைபனைததுணையாககககொளளபபடுதலினாலவவொனறுமே யவறறையெலலாஙகெடுககுமெனபதாம - இதனானனறலலதனறேமறககுநதிற ஙகூறபபடடது.

பு. (கொன்-ம்)எ-இ-ள். கொன்றன்ன-(தமக்குமுன்னொ ரு உதவிசெய்தவர்பின்தன்னைக்) கொன்றதைஒத்த, இன்னா செயினும்-துன்பங்களைச்செய்தாராயினும், (அவையெல்லா ம்) அவர்செய்தவொன்றுநன்று-அவர்முன்செய்த ஒரு உதவி யையும், உள்ளக்கெடும்-நினைக்கக்கெடும், எ-று.

வி. தினைத்துணைநன்றியைப் பனைத்துணையாகக்கொள்ள ப்படுதலாலே, அந்த ஒன்றுமே அவற்றையெல்லாங்கெடுக்கு மென்பது, கருத்து. இதினாலேநன்றல்லதை அன்றேமறப்ப தற்கு உபாயஞ்சொல்லப்பட்டது.

௱௰. எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாமுய்வில்லைச்
செய்ந்நன்றிகொன்றமகற்கு.

ப. எது-பெரியவறஙகளைசசிதைததாரககுமபாவததைநீஙகுமவாயிலுண டாமொருவனசெயதநனறியைசசிதைததமகனுககு அஃதிலலையெனறவாறு.

வி. பெரியவறஙகளைசசிதைததலாவது- ஆனமுலையறுததலுமசளீரகருவு சிதைததலுமபாரபபாரததபுதலுமுதலியபாதஙகளைசசெயதல- இதனாறசெய நனறிகோறலினகொடுமைகூறபபடடது.

பு. (எந்-கு) எ-இ-ள். எந்நன்றிகொன்றார்க்கும்-எந்தத் தருமங்களை அழித்தவர்க்கும், உய்வுண்டாம்-(அந்தப்பாவத் தை ஒழிக்கும்) ஒழிவுண்டாகும், செய்நன்றி-(ஒருவன்)செய் த உதவியை, கொன்றமகற்கு-கெடுத்தமனிதனுக்கு, உய்வில் லை-(அந்தப்பாவ) ஒழிவு இல்லை, எ-று.

வி. கோவில், அறச்சாலை,பசு,பார்ப்பார்,கற்புடைமகளிர், முதலியபாதுகாவல் அறங்களைக்கெடுத்தவரும்அடங்குதற்கு, எந்நன்றிகொன்றார்க்குமென்றார். இதினாலே,செய்நன்றிகெ டுத்தவின்கொடுமைசொல்லப்பட்டது.

## ௰௨. அதிகாரம்.

## நடுவுநிலைமை.

ப-ம. நடுவுநிலைமை-அஃதாவது-பகைநொதுமனநணபெனனுமூனறு பகுதியினுமறததினவழுவாதொபபநிறகு நிலைமை-இதுநனறிசெயதாரமாட

டநநனறியினைநினைததவழிசசிதையுமனறெயவவிடததுஞசிதையலாகாதென
றறஞசெயநனறியறிதவினபினவைககபபடடது.

பு-ம். (நடு-மை) அதாவது; பகை, புதுமுகம், நட்பு, என்கின்றமூன்றுபாலிலுந் தருமத்திலேதவறாமற்சமமாகநிற்கும் நிலைமையைச்சொல்வது. இது, உதவிசெய்தவரிடத்தில் அந்த உதவியைநினைத்தபோது, இந்தநடுவுநிலைமைகெடுமாதலால், அப்படிப்பட்டஇடத்திலுங்கெடலாகாது என்பதற்காகச்செய்நன்றியறிதலின்பின்வைக்கப்பட்டது.

௱௰௧. தகுதியெனவொன்றுநன்றேபகுதியாற்
பாற்பட்டொழுகப்பெறின்.

ப. எது-நடுவுநிலைமையெனறுசொலலபபடுமோரறநுமேநனறுபகை
நொதுமனணபெனனும பகுதிதோறுமதனமுறைமையைவிடாதொழுகபபெ
றினெனறவாறு.

வி. தகுதியுடையதனைததகுதியெனறா-ஊரானோாதேவகுலமெனப
துபோலபபகுதியானெனபுழியானுருபுதோறுமெனபதனபொருடடாயநினற
து--பெறினெனபதவவொழுககததருமைதோனறநினறது--இதனானடுவுநிலை
மையதுசிறபபுககூறபபடடது.

பு. (தகு-ன்) எ-இ-ள். தகுதியெனவொன்றுநன்றே-நடுவுநிலைமையென்கின்றஒருதருமமுமேநன்று, பகுதியான்-(பகை, புதுமுகம், நட்பு, என்னும்)பால்களிலேயெல்லாம், பாற்பட்டு-(அந்தநடுவுநிலைமையின்)உரிமையொடுகூடி, ஒழுகப்பெறின்-நடக்கப்பெற்றால், எ-று.

வி. தகுதியை உடையதைத்தகுதிஎன்றது, ஆகுபெயர். ஊரானோர்தேவகுலம், என்பதற்குப்பொருள், ஊர்தோறும் ஒருதேவகோயில்; இதுபோலப்பகுதியான் என்னுமிடத்தில், ஆன் உருபு, தோறும்என்பதன்பொருள்படநின்றது. பெறின் என்றது, அந்த ஒழுக்கத்தினது அருமைதோன்றும்படியாகநின்றது. இதினாலே, நடுவுநிலைமையின்சிறப்புச்சொல்லப்பட்டது.

௱௰௨. செப்பமுடையவனாக்கஞ்சிதைவின்றி
யெச்சத்திற்கேமாப்புடைத்து.

ப. எது-நடுவுநிலைமையையுடையவனதுசெலவமபிறாசெலவமபோல
ழிவினறியவனவழியினுளளாாககுமவலியாதலையுடைததெனறவாறு.

வி. விகாரததாறறொககவெசசவுமமையாளிறககுநதுணையுமவனறனககு மேமாபபுடைததெனபதுபெறறம--அறததொடுவருதலினனனதாயிறறு-தா னிறநதுழியெஞசிநிறபதாகவினெசசமெனறார.

பு. (செப்-து) எ-இ-ள். செப்பமுடையவனுக்கம்-நடுவுநிலைமையை உடையவ்னதுசெல்வமானது, சிதைவின்றி(பிறர்செல்வம்போல) அழிவில்லாமல், எச்சத்திற்கு-(அவன்)சந்ததிக்கும், ஏமாப்புடைத்து-இன்பமாவதையுடைத்து, எறு.

வி. எச்சத்திற்கு என்னுமிடத்து, உம்மைகுறைந்துநின்றதாதலால், அவன் இறக்கும் அளவும் அவனுக்கும் இன்பமாவதை உடைத்தாம் என்பது, பெறப்பட்டது. தருமத்தொடு பொருந்திவருதலாலே, அப்படியாமெனக்காண்க. தான் இறந்தபோதுமிகுந் துநிற்பதாதலால், சந்ததியை எச்சமெனப்பட்டது. இதிஞலே, நடுவுநிலைமையானுடையசெல்வம் அழியாதென்பது, சொல்லப்பட்டது.

## ௱௰௩. நன்றேதரினுநடுவிகந்தாமாக்கத்தை யன்றேயொழியவிடல்.

ப. எது-தீஙகினறிநனமையேபயநததாயினுநடுவுநிறறலையொழிநதுணடாகினறவாககததையபபொழுதேயொழியவிடுகவெனறவாறு.

வி. நனமைபயவாமையினனறேதரினுமெனறார-இககததலானெனபதிகந தெனததிரிநதுநினறது-இவையிரணடுபாடடானுமுறையேநடுவுநிலைமையா னவநதசெலவநனமைபயததலுமேனைசசெலவநதீஙகுபயததலுஙகூறபபட டன.

பு. (நன்-ல்) எ-இ-ள். நன்றேதரினும்-(தீங்கில்லாமல்) நன்மையையேதருமாவைும், நடுவிகந்து-நடுவுநிலைமையை நீங்கினதிஞலே, ஆம்-உண்டாகின்ற, ஆக்கத்தை-செல்வத்தை, அன்றே-அப்பொழுதே, ஒழியவிடல்-ஒழிந்துபோம்படியாகவிடுக, எறு.

வி. செயவெனெச்சம், நடுவிகந்துஎன்கின்ற இறந்தகால வினையெச்சமாகத்திரிநது, இங்கேகாரணப்பொருட்டாய்நின்றது. நடுவுநிலைமையைவிட்டதிஞலேவருஞ்செல்வமானதுநன்மைதருவதே இல்லை, அப்பொழுது நன்மைதருவதுபோலத் தோன்றினும், பின்பு அநுபவத்தில்,தீவினைப்பயனுகவேவிளையுமாதலால், அதைவிரும்பலாகாதென்பதுகருத்து. இதிஞ

லே, நடுவுநிலைமை ஒழிந்துவந்தசெல்வந்தீங்குதருமென்பது சொல்லப்பட்டது.

௱௰௪. தக்கார்தகவிலரென்பதவரவ
ரெச்சத்தாற்காணப்படும்.

ப. எது-இவாநடுவுநிலைமையுடையரிவாநடுவுநிலைமையிலரெனனுமவி சேடமவரவருடையநனமககளதுணமையாலுமினமையாலுமறியபபடுமென றவாறு.

வி. தககாரகெசசமுணடாதலுநதகவிலாரகிலலையாதலுமொருத லையாகவினிருதிறததாரையுமறிதறகவைகுறியாயின-இதனாறறககாரையுநதக விலாரையுமறியுமாறுகூறபபடடது.

பு. (தக்-ம்) எ-இ-ள். தக்கார்-(இவர்) நடுவுநிலைமையு டையவர், தகவிலர்-(இவர்)நடுவுநிலைமையில்லாதவர்,என்பது- என்றுசொல்லப்படுவது, அவரவரெச்சத்தாற்காணப்படும்- அவரவருடைய மக்களாலே அறியப்படும், எ-று.

வி. வித்தினாலேமரத்தை அறிவதுபோல அவர்பெற்ற மக்களாலே,தக்காரையுந்தகவிலாரையுந்தானே அறியலாமென் பார், காணப்படுமென்றார். செந்நெலாலாயசெழுமுளைம ற்றுமச்செந்நெலேயாகிவிளைதலால் - மகனறிவுதந்தையறிவு எனப்பிறருமிப்படிச்சொல்லுதல்காண்க. இதினாலே, தக்கா ரையும்தகவிலரையும் அறியுங்குறிசொல்லப்பட்டது.

௱௰௫. கேடும்பெருக்கமுமில்லல்லநெஞ்சத்துக்
கோடாமைசான்றோர்க்கணி.

ப. எது-தீவினையாறகேடுநலவினையாறபெருககமுமயாவாககுமுனனே யமைநதுகிடநதனவவவாறறையறிநதவைகாரணமாகமனததிறகோடாமை யேயறிவானமைநதாாககழகாவதெனறவாறு.

வி. அவைகாரணமாககோடுதலாவதவையிபபொழுதுவருவனவாகக கருதிககேடுவாராமையைககுறிததும பெருககமவருதலைககுறிததுமொருத லைககணிறறல-அவறறிறகுககாரணமபழவினையேகோடுதலனறெனவுணமை யுணாநதுநடுவுநிறறலசாலபினையழகுசெயதலிறசானறோககணியெனறார்.

பு. (கே-ணி)எ-இ-ள். கேடும்- (தீவினையாற்) கெடுதலு ம், பெருக்கமும்-(நல்வினையாற்)பெருகுதலும், இல்லல்ல-இ ல்லாமலல்ல,(முன்னேதானேயாவர்க்கும் அமைந்திருந்தனவா ம் ஆதலால் அதுதெரிந்து அந்தஇரண்டுங்காரணமாக) நெஞ்ச

த்துக்கோடாமை-மனத்திற் கோணுதிருப்பதே, சான்றோர்க் கணி-(அறிவிலே)பூரணமானவர்க்கு அழகு, எ-று.

வி. அந்தஇரண்டுங்காரணமாகக்கோணுதலாவது, அவை இப்பொழுதேவருபவையாகநினைத்துக், கேடுவாராதிருப்ப தைக்குறித்தும், பெருக்கம்வருவதைக்குறித்தும், சமனுகநில் லாமல்ஒருபாலிலேநிற்பது. அவற்றினுக்குக்காரணம்பழவினை யே, அதுகோணுமலே தம்மைநாடிவந்துஅடையுமென்று உ ண்மைஉணர்ந்து, நடுவிலேநிற்பது, சான்றோரை அழகுசெய் வதாற், சான்றோர்க்கணியென்றார். பழவினைகோணுமலே தம் மைநாடிவந்தடையுமெனபதற்கு உ-ம்,

பல்லாவுளித்துவிடினுங்குழக்கன்று
வல்லதாந்தாய்நாடிக்கோடலைத், தொல்லைப்,
பழவினையு மன்னதகைத்தேதற்செய்த,
கிழவனைநாடிக்கொளற்கு, எனக்காண்க.

இ-ள் அதன் தாயை விகாரப்படுத்திப்பலபசுக்கள்நடுவிலே நிற்கச்செய்து அதன்கன்றை அவிழ்த்துவிட்டபோதும் அந்தக்கன்று தன்தா யைத்தேடிசசென்று அடையவல்லதாம் பழவினையுந்தன்னை உண்டுபண்ணின கருத்தனைநாடிச்சென்றடைதற்கு அதுபோ லும வன்மைக்குணத்தையுடையது, எனக்காண்க.

௱௰௬. கெடுவலியானென்பதறிகதன்னெஞ்ச
நடுவொரீஇயல்லசெயின்.

ப. எது-ஒருவனறனெனெஞச நடுவுநிறறலையொழிநது நடுவலலவறறைச செயய நினைககுமாயின நநினைவையானகெடககடவெனென றுணருமுறபாத மாகவறிகவெனறவாறு.

வி. நினைததலுஞசெயதலோடொககுமாகலிறசெயினெனறார.

பு. (கெடு-ன்.)எ-இ-ள்.தன்னெஞ்சம்-ஒருவனுடைய ம னசானது, நடுவொரீஇ-நடுவுநிலைமையைநீங்கி, அல்லசெயின்-(நடுவுநிலைமை) யல்லாதபாவங்களைச்செய்ய நினைக்குமாஞல், (அந்தநினைவைஅப்பொழுதே) கெடுவலியானென்பதறிக -நா ன்கெடக்கடவேனென்பதாகஅறிந்துகொள்க, எ-று.

வி. நினைத்தலுஞ் செய்தலோடொக்குமாதலால் நினைப் பின்என்ஞமற்செயின் எனவும், அந்தநினைப்பினுலேயின்புகெ

டுவது நிச்சயமாதலாற், காரணத்தைக் காரியமாகஉபசரித்துக் கெடுவல்யானென்பதுளனவுஞ், சொன்னார். அந்தநினைவௌ ன்பது, குறைந்துநின்றது. என்பது என்றதை,என்பதாகஎன முற்றெச்சமாக்கி, அறிகஎன்னும் வியங்கோள் வினைகொண்டு முடிந்ததெனக்காண்க.

௱௰௭. கெடுவாகவையாதுலகநடுவாக
நன்றிக்கட்டங்கியான்றாழ்வு.

ப. எது-நடுவாகநினறறததினகணணே தஙகினவனதுவறுமையைவறு மையெனறுகருதாருயாநதோரெனறவாறு.

வி. கெடுவெனபதுமுதனிலைததொழிறபெயா-செலவமெனறுகொளளு வரெனபதுகுறிபபெசசம - இவைமூனறுபாடடானுமுறையே- கேடுமபெருக கமுஙகொடுதலாலவாராதெனபதூஉஙகொடுதலகேடடிறகேதுவெனபதூஉங கோடாதவனறுழவுகேடனறெனபதூஉஙகூறபபடடன.

பு. (கெ-வு.)எ- இ-ள். நடுவாக-நடுவுநிலைமையாகிய நீதி யையுடையவனாக, நன்றிக்கண்-தருமத்திலே, தங்கியான்-நிலைத்தவனுடைய, தாழ்வு-வறுமையை, கெடுவாக-வறுமையாக, வையாதுலகம்-கொள்ளாருயர்ந்தோர்,(செல்வமென்றுகொள் வார்,) எறு.

வி. கெடு என்றது, ஏவல்வினையன்று, விகுதிக்குமுன்னிற்குமுதனிலைத்தொழிற்பெயர். தாழ்வு, கெடு, என்பவையாகு பெயர். செல்வமென்றுகொள்வாரென்பது, அருத்தாபத்தி. இவைமூன்றுபாட்டாலும் முறையேகேடும் பெருக்கமும், மனத்திற்கோணுதலாலே வாராதென்பதும், கோணுதல் கேட்டிற்குக்காரணமென்பதும், கோணாதவன் வறுமை வறுமையன்றென்பதுஉ, சொல்லப்பட்டன.

௱௰௮. சமனாசெய்துசீர்தூக்குங்கோல்போலமைந்தொருபாற்
கோடாமைசான்றோர்க்கணி.

ப. எது-முனனேதானசமனாகநினறுபின றனகணவைததபாரததை வரையறுககுநதுலாமபோல விலககணஙகளானமைநதொரு பககததுககோ டாமைசானறோககழகாமெனறவாறு.

வி. உவமையடையாகிய சமனாசெயதலுஞ சீாதூககலும பொருடக ணணும பொருளடையாகிய வமைதலுமொருபாறகோடாமையு முவமைகக ணணுஙகூடடிசசானறோ சீாதூககலாவது தொடைவிடைகளாறகேடடவற

றையுழானுள்ளவாறுணாதலாகவுமொருபாற கோடாமையாவதவவுள்ளவாற றைமறையாதுபகைநொதுமனட்பெனனுமூனறுதிறததாாககுமொபபககூறு தலாகவுமுளைகக-இலககணஙகளானமைதலிருவழியுமேறபனகொளக.

பு. (சம-ணி) எ-இ-ள். சமஞ்செய்து (முன்புதான்) சமமாகநின்று, (பின்புதன்னிடத்தில்வைத்த) சீர்தூக்குங் கோல்போல்-பாரத்தை (இவ்வளவுஎன்று) வரையறுக்கின்ற துலாக்கோல்போல, அமைந்து-(இலக்கணங்களாலே) பொருந்தி, ஒருபார்கோடாமை-ஒருபக்கத்திலே கோணுதிருப்பது, சான்றோர்க்கணி-(நடுவுநிலைமையாகிய நீதி) நிறைந்தோர்க்கு அழகாம், எ-று.

வி. உபமானத்தைவிசேடித்தசமஞ்செய்தலையும, சீர்தூக்குதலையும், உபமேயமாகியசான்றோரிடத்தும், உபமேயத்தை விசேடித்த அமைதலையும், ஒருபார்கோடாமையையும், உபமானத்தினிடத்துங்கூட்டிச் சான்றோர் சமஞ்செய்தலாவது, பகை புதுமுகம் நட்பென்னுமூன்றிடத்தும், ஒரேதன்மையாக இருப்பதாகவும், சீர்தூக்கலாவது, எழுத்தினுலும் வாய்ச்சொல்லினுலுந் தாம்வாங்கி உட்கொண்ட அவற்றைவிதிமுறைப்படி ஆராய்ந்துஉண்மைஅறிவதாகவும், ஒருபார்கோடாமையாவது, அந்தஉண்மையை மறையாமல் மேற்சொல்லிய மூன்றுதிறத்தவர்க்கும் ஒத்திருக்கும்படி சொல்லுதலாகவுங்,கொள்க. இலக்கணங்களாலமைதலாவது, இன்னும்உபமானம் உபமேயம்என்னும் இரண்டிடத்தும்பொருந்தவேண்டுபவைபொருந்துதலாம். உவமையை, உபமானமென்றும்; பொருளை, உபமேயமென்றுஞ்; சொல்வதுவடநூல்வழக்கு.

௱௰௯. சொற்கோட்டமில்லதுசெப்பமொருதலையா
வுட்கோட்டமின்மைபெறின்.

ப. எது-நடுவுநிலைமையாவது சொலலினகடகொடுதலிலலாத தாமஃதுறறுவது மனததினகடகோடடமிலலாமையைததிணணிதாகபபெறினெனற வாறு.

வி. சொலஉளழான றுததுசசொலலுஞசொல-காரணமபறறியொருபாறகொடாதமனததோடு கூடுமாயினறஙகிடநதவாறு சொலலுதனடுவுநிலையாமெனவேயதனொடுகூடாதாயினவவாறுசொலலுதனடுவுநிலைமையனறெனபது கூறபபடடது.

பு. (சொ-ன்) எ-இ-ள். சொற்கோட்டமில்லது-சொல் லிலேகோணலில்லாதிருப்பது, செப்பம்-நடுவுநிலைமையாம், உட்கோட்டமின்மை - மனத்தினிடத்திலேகோணலில்லாதிரு ப்பதை,ஒருதலையாப்பெறின்-(அது) நிச்சயமாகப்பெற்றால் எ-று.

வி. சொல்,விதிமுறையாக அறுத்துச்சொல்லுஞ்சொல். அந்தச்சொல், காரணம்பற்றி ஒருபக்கத்திற்கோணுதமனத் தோடுகூடுமானால், தருமம் இருந்தபடிசொல்வது, நடுவுநிலை மையாம்; எனவே, அதனோடுகூடாதானால், அப்படிச்சொல் வது, நடுவுநிலைமை அன்று என்பது, சொல்லப்பட்டது.

இனி இதற்குவேறுரை. சொற்கோட்டமில்லது என்னுமி டத்திலே, இறந்ததுதழுவிநின்றஇழிவுசிறப்புஉம்மைகூட்டிச், சொற்கோட்டமில்லதும், எனவும்; உட்கோட்டமின்மையெ ன்னுமிடத்திலே, இறந்ததுதழுவிநின்றஉயர்வுசிறப்பு உம்மை கூட்டி, உட்கோட்டமின்மையும், பெறின் எனவும்; பொரு ளுரைத்து: அதினாலே, பொருட்கோட்டமும் மனக்கோட் டமும் இல்லாதபோது, சொற்கோட்டமுடையதும், நடுவுநி லைமையாமெனவும்; அந்த இரண்டும் உண்டானாற்சொற்கோ ட்டமில்லது,நடுவுநிலைமையாகாதுஎனவும்; சொற்கோட்டம், பொருட்கோட்டம்,மனக்கோட்டம்,மூன்றுமில்லாததே, நடு வுநிலைமைக்குச்சிறந்ததுஎனவுங்; கொள்க. இவைஇரண்டுபாட் டாலுநடுவுநிலைமைக்கு இலக்கணஞ்சொல்லப்பட்டது.

௱௨௰. வாணிகஞ்செய்வார்க்குவாணிகம்பேணிப்
பிறவுந்தமபோற்செயின்.

ப. எது-பிறர்பொருளையுந்தம்பொருள்போலப்பேணிவாணிகஞ்செய் வார்க்கு நன்றாயவாணிகமாமென்றவாறு.

வி. பிறவுந்தம்போற்செய்தலாவது-கொள்வதுமிகையுங்கொடுப்பது குறையுமாகாமலொப்பநாடிச்செய்தல்--இப்பாட்டுமூன்றனுண் முன்னையவிர ண்டுமவையத்தாரைநோக்கினவேனையதுவாணிகரைநோக்கிற்றவ்விருதிறத்தா ர்க்குமிவ்வறம்வேறுகச்சிறந்தமையின்.

பு. (வா-ன்) எ-இ-ள். பிறவும்-பிறர்பொருள்களையும்,த ம்போல-தம்முடையபொருள்களைப்போல,பேணிச்செயின்-

பாதுகாத்துச்செய்வாரானால், வாணிகஞ்செய்வார்க்குவாணிகம்-வியாபாரஞ்செய்வார்க்குவியாபாரம்மிகவும்நன்றாம், எ-று.

வி. சொல்லெச்சமாகவாணிகம் என்பதற்குப் பயனிலை குறைந்துநின்றது. பிறவுந்தமபோற்பேணிச்செய்தலாவது, கொள்வதில் அதிகமும், கொடுப்பதிற்குறைவுமாகாமல், நடுவுநிலைமைக்கொத்திருக்கச்செய்வது. இப்படிச்செய்வார்க்கு அந்தவாணிகம் வளரஅழுக்கக்கூடாதநல்லாக்கமுடையதென்பார், வாணிகஞ்செய்வார்க்கு வாணிகமெனப்பயனிலைகொடாதொழிந்தார். இந்தநடுவுநிலைமை இவர்க்குமிகவுஞ்சிறந்ததென்பார், இப்பாட்டை அதிகாரமுடிவிலேவைத்தார். இதினாலே, வாணிகர் ஆக்கஞ்சொல்லப்பட்டது.

---

## ௰௩. அதிகாரம்.

# அடக்கமுடைமை.

ப-ம. அடககமுடைமை- அஃதாவதுமெயமொழிமனஙகடநெறிககடசெலலாதடஙகுதலுடையனாதல-அஃதேதிலார்குறறமபோறறஙகுறறஙகாணு நடுவுநிலைமையாளுககாகலினிது நடுவுநிலைமையினபினவைககபபடடது.

பு-ம். (அட-மை) அதாவது, மனவாக்குக்காயங்கள்பாவவழியிலே செல்லாமல் அடங்குவதுடையனாவதைச்சொல்வது. இதுநடுவுநிலைமையென்கின்றநீதிநெறியாளனுக்கே உரியதாகலின், நடுவுநிலைமையின்பின்வைக்கப்பட்டது.

### ௱௨௰௧. அடக்கமமரருளுய்க்குமடங்காமை யாரிருளுய்த்துவிடும்.

ப. எது-ஒருவனையடககமாகியவறமபினறேவருலகததுமடஙகாமையாகியபாவநதஙகுதறகரியவிருளினகணணுஞசெலுததுமெனறவாறு.

வி. இருளெனபதோநரகவிசேடம -- எலலாமபொருளிறபிறநதுவிடுமெனபதுபோலவுயததுவிடுமெனபதொருசொலலாயநினறது.

பு. (அட-ம்)எ-இ-ள். அடக்கமமரருளுய்க்கும்-அடக்கமுடைமையாகியதருமமானது (தன்னைச்செய்தவனைப்பின்பு) தேவருள் ஒருவனாகச்செலுத்தும, அடங்காமையாரிருளுய்த்

துவிடும்-அடங்காமையாகியபாவமானது அரியநரகத்திலேசெலுத்திவிடும், எ-று.

வி. பாவபுண்ணியங்களிரண்டும் ஒருவர்க்கு இம்மையிலேசெயப்படுபொருளாகியகருமங்களாகநிற்குமாயினும்,மறுமையிலே அவற்றைச்செய்தவனைச்செயப்படுபொருளாக்கித் தாம்வினைமுதலாகியகருத்தாவாமென்றுசொல்லவந்தவர்,உய்க்கும் என்றும், உய்த்துவிடுமென்றுஞ், சொன்னார். உய்த்துவிடும் என்பது, பிறந்துவிடும், நின்றுவிடும், என்பவைபோல, ஒருசொல். உய்த்துப்பின்கழியும் எனினும், அமையும். இருள், நரகம். அருமையிருள், ஆரிருளெனவிகாரப்பட்டுநின்றது.

௱௨௨. காக்கபொருளாவடக்கத்தையாக்க
மதனினூஉங்கில்லையுயிர்க்கு.

ப. எது-உயிர்கட்கடக்கத்தின்மிக்கசெல்வமில்லையாகலானவ்வடக்கத்தையுறுதிப்பொருளாகக்கொண்டழியாமற்காக்கவென்றவாறு.

வி. உயிரெனபது-சாதியொருமை அஃறிணைமக்களுயிரேமேனின்றது நிற்றடங்கிப்பயன்கொள்வதுவேயாகலின.

பு. (கா-கு) எ-இ-ள். உயிர்க்கு-உயிர்களுக்கு, அதனினூங்காக்கமில்லை-அந்த அடக்கத்தின்மிக்கசெல்வமில்லை, (ஆதலாலே) காக்கபொருளாவடக்கத்தை-அடக்கத்தை(உறுதிப்) பொருளாகக்கொண்டு (அழியாமலே) காக்கக்கடவது, எ-று.

வி. உயிர் என்றது, சாதி ஒருமை. அறிந்து அடங்கி அந்தப்பலனைக்கொள்வது அதுவாதலால், இங்கே உயிர் என்றது, மக்கள் உயிரையேகுறித்துநின்றது.

௱௨௩. செறிவறிந்துசீர்மைபயக்குமறிவறிந்
தாற்றினடங்கப்பெறின்.

ப. எது-அடங்குதலேநமக்கறிவாவதென்றறிந்துநெறியானேயொருவனடங்கப்பெறினவ்வடக்கநல்லோரானறியப்பட்டவனுக்குவிழுப்பத்தைக்கொடுக்குமென்றவாறு.

வி. இல்வாழ்வானுக்கடங்குநெறியாவது மெய்முதலியமூன்றுந்தனவயத்தவாதல.

பு. (செறி-ன்) எ-இ-ள். அறிவறிந்து-(அடங்குவதேநமக்கு) ஞானமாவதென்று அறிந்து, ஆற்றின்-நெறியினாலே,

அடங்கப்பெறின்-(ஒருவன்) அடங்கப்பெறுவானானால், செறிவு-(அந்த) அடக்கமானது, அறிந்து-(நல்லோர்களாலே) அறியப்பட்டு, சீர்மைபயக்கும் - (அவனுக்கு) சிறப்பைத்தரும், எ-று.

வி. கிரகத்தனுக்கு அடங்குநெறியாவது, மனவாக்குக்காயங்கள்தன்வசப்படுவது. இனிஇக்குறளுக்குவேறோர்முடிபு.

அறிவறிந்து-அறிவினாலே (தனக்கு அறியவேண்டியவற்றை)அறிந்து, ஆற்றின்-(அந்தஅறிந்த) நெறிக்குத்தக, அடங்கப்பெறின் - (மனமொழிமெய்கள்) அடங்கப்பெறுவானானால்,செறிவு-அந்தஅடக்கம், அறிந்து-(உயர்ந்தோரால்) அறியப்பட்டு,சீர்மைபயக்கும்-செல்வமுடைமையைத்தரும்,எ-று.

இதற்கு, வி. ஆற்றின் என்றஇடத்தில்இன், சாரியையெனக்கொண்டு, கு உருபும், அதன்தகவுப்பொருளும்,குறைந்துநின்றதெனக்கொள்க. சுட்டுக்கள்,வருவித்துரைக்கப்பட்டன.

௱௨௪. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

ப. எது-இலவாழககையாகிய தனனெறியினவேறுபடாதுநினறடஙகினவனதுயாசசிமலையினுமிகபபெரிதெனறவாறு.

வி; திரியாதடஙகுதல-பொறிகளாறபுலனகளைநுகராதினறேயடஙகுதல-மலையாகுபெயா.

பு. (நிலை-து) எ-இ-ள். நிலையிற்றிரியாது-(தனக்குரிய இல்வாழ்க்கை) நிலையிலேநின்றுமாறுபடாமல், அடங்கியான்றோற்றம்-அடங்கினவனுடையஉயர்ச்சி, மலையினுமாணப்பெரிது-மலையின் உயர்ச்சியினுமிகப்பெரிதாம், எ-று.

வி. திரியாதடங்குதல், இந்திரியங்களால்நல்விடையங்களாகிய அநுபவங்களை அநுபவித்தேமனமொழிமெய்கள்அடங்குவது. மலை, பொருளாகுபெயர்.

௱௨௫. எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

ப. எது-பெருமிதமினறியடஙகுதலெலலாாககுமொபபநனறேயெனினுமவவெலலாருளளுஞசெலவமுடையாாககேவேறொருசெலவமாஞசிறபபினையுடைததெனறவாறு.

வி. பெருமிதததினைசசெயயுஙகலவியுஙகுடிபபிறபபுமுடையாரஃதின றியவைதமமானேயடஙகியவழிசசிறநதுகாடடுமாகலிறசெலவாககேசெலவந தகைததெனறார-செலவததகைததெனறது மெலிநதுநினறது-பொதுவெனபா ரையுமுடனபடடுசசிறபபாதலகூறியவாறு - இவையைநதுபாடடானுமபொ துவகையானடககததுசசிறபபுககூறபபடடது.

பு. (எல்-து) எ-இ-ள். எல்லார்க்குநன்றாம்பணிதல்-(கரு வியாமல்) அடங்குகிறது எல்லார்க்கும் (பொதுப்பட) நன் மையாம், (ஆயினும்) அவருள்ளும்- அந்த எல்லாருள்ளும், செ ல்வர்க்கேசெல்வந்தகைத்து-செல்வமுடையவர்க்கே (அந்தஅ டக்கம்மேலுமொரு)செல்வச்சிறப்பினையுடையதாம், எ-று.

வி. கருவத்தையுண்டாக்குகின்றகல்வியும், உயர்குடிப்பி றப்பும், பொருளும், வீரமும், முதலாயின உடையவர், அந்த க்கருவமில்லாமலே, அவைதம்மாலே அடங்கினபோது, மே ன்மேலுஞ்சிறந்துகாட்டும், ஆதலால் சிறப்பினுள்ளும், பொ துப்படச்செல்வர்க்கே செல்வந்தகைத்தென்றார். செல்வத்த கைத்தென்பது, செல்வந்தகைத்து என்று, மெலித்தல்விகார மாய்நின்றது. எல்லார்க்குமெனப்பொதுவாக உடன்பட்டுச் செல்வர்க்கே எனச்சிறப்பாகச்சொல்லியபடி. இவையைந்து பாட்டாலும், அடக்கமுடைமையின்சிறப்புச்சொல்லப்பட்டது.

௱௨௬. ஒருமையுளாமைபோலைந்தடக்கலாற்றி னெழுமையுமேமாப்புடைத்து.

ப. எது-ஆமைபோலொருவனொருபிறபபினகணமபொறிகளையுமடக கவலலனாயினவவனமையவனுககெழுபிறபபினகணணுமாறுதலையுடைததென றவாறு.

வி. ஆமையைநதுறுபபினையுமிடாயுநதாமலடககுமாறுபோலவிவனு மைமபொறிகளையுமபாவமபுகாமலடககவேணடுமெனபா ராமைபோலெனறு ா- ஒருமைககடசெயதவினையினபயனெழுமைதோறுநதொடருமெனபதிதனு னறிக-இதனுனமெயயடககஙகூறபபடடது.

பு. (ஒரு-து) எ-இ-ள். ஒருமையுள்-ஒருபிறப்பிலே, ஆ மைபோல-ஆமை (ஐந்து உறுப்புக்களையும்விக்கினம்வாராம ல் அடக்குவது) போல, ஐந்தடக்கலாற்றின்-(ஒருவன்) ஐம் புலன்களையும் (பாவம்வாராமல்) அடக்கவல்லவனானல், (அந் தவல்லமை அவனுக்கு) எழுமையுமேமாப்புடைத்து-எழுவகை ப்பிறப்பிலும் இன்பமுடைத்தாம், எ-று.

வி. விக்கினம்வாராமல் என்பது, உபமானத்திலே இசையெச்சமாகக்குறைந்துநின்றறிஞலே, உபமேயத்திலும்பாவம்வாராமலென்பதுவருவிக்கப்பட்டது. பொறிபுலன்களிரண்டுங்காரணகாரியமாதலால், இரண்டையும் அடக்கவேண்டுமென்பார், பொதுப்பட ஐந்தடக்கலாற்றின் என்றார். ஆமை ஐந்துறுப்புகளையும்விக்கினம்வாராமல் அடக்குதல்போலப் புலன்களைப்பாவம்வாராமல் அடக்கிஞவின்பமாமென்பதற்கு, உ-ம்.

ஆமைகன்னுறுப்போனைந்துந்தன்னுளேயடக்குமாபோற்,
றீமைசெய்புலன்களைந்துந்தன்னுள்ளேசெறியச்சேர்த்தின்,
வாய்மையுண்ணிகழுமென்னைவழுத்தவும்படநின்றானேற்,
றாய்மைசெய்தவர்களுளுஞ்சொல்லுவதவன்றன்சொல்லே,

எனக்காண்க. ஒருவன்ஒருபிறப்பிலேசெய்தவினைப்பயன்எழுவகைப்பட்டசன்னந்தோறுந்தொடருமென்பதுகருத்து. இதிஞலே, சரீர அடக்கஞ்சொல்லப்பட்டது.

௱௨௭. யாகாவாராயினுநாகாக்ககாவாக்காற்
சோகாப்பர்சொல்லிழுக்குப்பட்டு.

ப. எது -தமமாறகாககபபடுவனவெலலாவறறையுஙகாககமாடடாராயினுநாவொனறனையுஙகாககவதனைககாவாராயிறசொறகுறறததினகடபடடுததாமேதுனபுறுவொனறவாறு.

வி. யாவெனபதஃறிணைபபனமைவிஞபபெயர் அஃதிணடெஞசாமையுணரநினறது-முறறுமமைவிகாரததாறறொககது-சொறகுறறஞசொலவினகடடோனறுஙகுறறம-அலலாபபாசெமமாபபொனபனபோல சசோகாபபொனபதொருசொல.

பு. (யா-டு) எ-இ-ள். யாகாவாராயினும்-(தம்மாலேகாக்கவேண்டிய) எல்லாவற்றையுங்காக்கமாட்டாராயினும், நாகாக்க-நாவு ஒன்றையுங்காக்க, காவாக்கால்-(அதைக்) காக்காவிட்டால், சொல்லிழுக்குப்பட்டு-சொற்குற்றத்தில் அகப்பட்டு, சோகாப்பர்-துன்பப்படுவார், எ-று.

வி. யாஎன்பது அஃறிணைப்பன்மைவிஞப்பெயர்; அது இங்கே, ஒன்றுங்குறையாமை என்பதுபட, உம்மைகுறைந்துநின்றது. செம்மை, ஏமம், என்னும்பண்புப்பெயர், செம்

யுடையவர், இலமென்று-(நாம்) தரித்திரமுடையமானேமென்று நினைத்து, (அதுநீங்கும்படியாக) வெஃகுதல்செய்யார்-(பிறர்பொருளை)விரும்புவதைச்செய்யார், (விரும்பார்,) எ-று.

வி. வெல்லுதலாவது, புலங்களைப்பாவவழியிலேபோக விடாதிருப்பது. புலம்வென்றபுன்மையிலகாட்சியவர்க்கு.வறுமையிலலாததினாலேவெஃகுதலுமில்லையாயிற்று. புன்மையில் காட்சி, பொருள்களை, மாறுபாடில்லாமல்-உணர்வது. இனி-வென்ற என்னும்பெயரெச்சம்-காட்சியவர் என்னும்பெயர் கொண்டுமுடியவேண்டுதலாலே புன்மையென, இடைப்பிறவரலவென்றபுன்மையெனப்பொருள்படுதலால் அதுபொருந்தாது என்பதை-உருபுமுற்றீரெச்சங்கொள்ளும்பெயர்வினையிடைப்பிறவரலுமாமேற்பன. என்னுஞ்சூத்திரநோக்கியுணர்ந்து-புலம்வென்றபுன்மை-என்பதற்கு, ஐம்புலன்களானவை வென்ற (வென்றியாகிய) புன்றொழிலானது, இல்-(தம்மிடத்து) இலலாத, காட்சியவர்-அறிவுடையவர், எனப்பொருள்கொண்டு-அறிவிலாதவனைவென்ற ஐம்புலப்புன்மைபுணராத அறிவுடையவர், என எழுவாயாக்கி-இலமென்றுவெஃகுதல் செய்யார், எனப்பயனிலை கூட்டிமுடிக்கப்பொருந்தும் எனக்காண்க வெல்லப்பட்டவர் அறிவிலராதலாலும், அந்த அறிவிலருள்ளும்-ஒருவனைஐம்புலன்களுங்கூடிவென்றதனாலும், வென்றவென்றியை, வென்றபுன்மையென்றார். ஆதலால, இது தொழில்கொண்டுமுடிந்த பெயரெச்சம். புன்மை, இங்கே தொழிலின்மேல்நின்றது. வென்ற(வெலலுதற்றொழிலாகிய) புன்றொழில, எனவிரியும். காட்சி, அறிவு.

௱எரு. அஃகியகன்றவறிவென்னாம்யார்மாட்டும்
வெஃகிவெறியசெயின்.

ப. எது-நுண்ணிதாயெலலா நூலகளிலுஞசென றதமமறிவெனனபபத தவாமபொருளைவிருமபியாவாமாட்டுமறிவொடுபடாதசெயலகளையறிவுடையா ரசெயவராயினெனறவாறு.

வி. யாாமாட்டுமவெறியசெயதல--தககாாமாடடுந தகாதாரமாட்டுமிழிநதனவுஙகடியனவுமுதலியசெயதல--அறிவிறகுபபயனலலசெயயாமையாகலின,- வெனறுமெனறா.

பு. (அஃ-ன்) எ-இ-ள். வெஃகி-(பொருளை) விரும்பி, யார்மாட்டும்-யாவரிடத்தும், வெறிய-மயக்கத்தொடு கூடிய செயல்களை, செயின்-(அறிவுடையார்)செய்வாராஹல், அஃகி-நுட்பமாகி, அகன்ற-(எல்லாநூல்களிலுஞ் சென்று) விரிந்த, அறிவென்னும்-(தம்முடைய) அறிவானது என்ன (பிரயோசனத்தையுடையது) ஆகும், எறு.

வி. யார்மாட்டும்வெறியசெயலாவது, மேல்மக்களிடத்தும் கீழ்மக்களிடத்தும்இழிவானவையும்கோபிக்கப்படுவையுமுதலானவைகளைச்செய்தல். அறிவுக்குப்பயன், அவைசெய்யாதிருப்பதாதலால், அஃகியகன்றவறிவென்னுமென்றார்.

௱௭௬. அருள்வெஃகியாற்றின்கணின்றான்பொருள்வெஃகிப்
பொல்லாதசூழக்கெடும்.

ப. எ-து·அருளாகியவறத்தைவிரும்பியதற்குவழியாகியவில்லறத்தின்க ணின்றவன்பிறர்பொருளைவௌவியதனைவருவிக்குங்குற்றநெறிகளையெண்ணக் கெடுமென்றவாறு.

வி. இல்லறநெறியாலறிவுமுதிர்ந்துழியல்லது துறக்கப்படாமையினத னைத்துறவறத்திற்காறென்றார்-கெடுதலிரண்டறமுஞ்சேரவிழத்தல்-சூழ்ந்தது ணையானேகெடுமெனவேசெய்தாற்கெடுதல்சொல்லாமையேபெறப்பட்டது.

பு. (அரு-ம்) எ-இ-ள். அருள்வெஃகி-கருணை(யாகிய துறவறத்தை) விரும்பி, ஆற்றின்கணின்றான்-(அதுபெறுதற்கு) வழி (யாகிய இல்லறத்திலே) நின்றவன், பொருள்வெஃகி-(பிறர்) பொருளைவிரும்பி, (அதைக்கொள்ளும்பொருட்டு) பொல்லாத-பொல்லாதவழிகளை, சூழ-ஆலோசனைசெய்ய, கெடும்-கெடுவான், எறு.

வி. இல்லறநெறியிலேநின்று அறிவுமுதிர்ந்தாலல்லது, துறவறத்தைக்கைக்கொளப்படாததினாலே, அதைத்துறவறத்துக்கு, ஆறு என்றார். கெடுதல்-இரண்டுதருமங்களையுமுடிய இழப்பது. ஆலோசனைசெய்தமாத்திரமேகெடுவான் எனவே, செய்தாற்கெடுவது, சொல்லவேண்டாதாயிற்று. இனி, அருள் வெஃகியாற்றின்கணின்றான் என்பதற்குத் (தன்னைப்பாவத்திலேநின்றுநீக்கிப்பிறவித்துன்பத்தைப்போக்கிப் பாதுகாத்தளித்தற்கு உரியகடவுளின்) கருணையைவிரும்பி அதைப்பெற

தற்கு-வழியாகிய இல்லறத்திநிலேநின்றவன், எனப்பொருள் கொளினதுசிறப்புடைத்து. என்னெனின், குடிசெய்வலென்னுமொருவற்குத்தெய்வமடிதற்றுத்தான்முந்துறும் எனஇவர்தாமேபிற்கூறுதலாலே, குடிசெய்வது அக்கடவுளருள்பெறுதற்குவழியென்பதுதுணிவு, ஆதலால், எனக்காண்க.

௱௭௭. வேண்டற்கவெஃகியாமாக்கம்விளைவயின்
மாண்டற்கரிதாம்பயன்.

ப. எ-து-பிறர்பொருளைவெஃகிக்கொண்டதனாலாகின்றவாக்கத்தைவிரும்பாதொழிக; பின்னதுபயன்விளைக்குங்காலவ்வாக்கத்தின்பயன்னன்றாதலில்லையாதலான் என்றவாறு.

வி. விளைவென்பதுமுதனிலைத்தொழிற்பெயர். இவையேழுபாட்டானும்வெஃகுதலின்குற்றங்கூறப்பட்டது.

பு. (வே-ன்) எ-இ-ள். பயன்விளைவயின்-(அநுபவிக்கும்படியாக) பயன்படுங்காலத்து, மாண்டற்கு-மாட்சிமைப்படுதற்கு, (நன்றாதற்கு) அரிதாம்-அரியதாம, (இல்லையாம்) (தீதாதற்கு உளதாம், ஆதலால்) வெஃகி-(பிறர்பொருளை) விரும்பிக்,-(கொண்டதினலே) ஆம் ஆகும், ஆக்கம்-செலவப்பெருக்கத்தை, வேண்டற்க-விரும்பாதிருக்க, எ-று.

வி. விளைவயின்-என்பது, வினைத்தொகைத்தொடர்மொழி. அது வினையின்றொகுதிகாலத்தியலு மென்னுஞ்சூத்திரம் நோக்கிக்காண்க. அதுமுக்காலத்திலுஞ்செல்லுமாயினும், இங்கே எதிர்காலங்குறித்து, நின்றது. பயன் என்னும் எழுவாய், விளை என்னும்முதனிலைவினைகொண்டது. இந்தஆக்கமானது பின்பு இன்பம்பயவாது துன்பமேபயத்தலினிதனைவிரும்பினோர் நிச்சயமாகவேகெடுவரென்பதற்கு இரங்கி, எதுவுங்காட்டியதனலேவேண்டற்கவெனவிலக்கினார். இது, எதுவிலக்கென்னும் அலங்காரத்தின்பாற்படும். இவையேழுபாட்டானும் ஆசைப்படுதலின்குற்றஞ்சொல்லப்பட்டது.

௱௭௮. அஃகாமைசெல்வத்திற்கியாதெனின்வெஃகாமை
வேண்டும்பிறன்கைப்பொருள்.

ப. எ-து-சுருங்காமைத்தாகியசெல்வத்திற்குச்சுருங்காமைக்காரணம் யாதென்றொருவனாராயினதுபிறனைவேண்டுகைப்பொருளைத்தான்வேண்டாமையாமென்றவாறு.

வி. அஃகாமையாகுபெயர-வெஃகாதானசெலவமஃகாதெனபதாயிறு.

பு. (அஃ-ள்) எ-இ-ள். செல்வத்திற்கு-(சுருங்கும் ஒழுங்குஉடையதாகிய) ஐசுவரியத்துக்கு, அஃகாமை-சுருங்காமைக்; (காரணம்) யாதெனின்-எது என்று (ஒருவன்) ஆராய்வானுல், (அது) வேண்டும்பிறன்கைப்பொருள்-பிறன்விரும்பப்படுங்கைப்பொருளை, வெஃகாமை-(தான்) விரும்பாதிருத்தலாம், எ-று.

வி. அஃகாமை, ஆகுபெயர். பிறர்பொருளைவிரும்பாதவன்செல்வஞ்சுருங்காதென்பது, கருத்து. இனியிதற்குவேறோர்முடிபு;

அஃகாமைசெல்வத்திற்கு - செல்வத்திற்குச்சுருங்காதிருக்குந்தன்மை, யாதெனின் - யாதாலமையுமென்று (ஒருவன்) வினுவினுயின், (அதற்கு) வேண்டும்பிறன்கைப்பொருள்-பிறன்விரும்புங்கைப்பொருளை, வெஃகாமை-விரும்பாதிருக்குந்தன்மை (யாலமையுமென்றுத்தரம்,) எ-று.

இதற்கு-வி. யாதென்னுமிடத்தும், வெஃகாமையென்னுமிடத்தும், மூன்றும்வேற்றுமையுருபும், அதன் பொருளும், தொக்குநின்றன. யாதெனின் என்றதனுல், ஒருவன் வினுவினுயின் என்பதும், அதற்கு உத்தரம் என்பதும்; வருவிக்கப்பட்டன.

௱எ௯. அறனறிந் துவெஃகாவறிவுடையார்ச்சேருந்
திறனறிந் தாங்கேதிரு.

ப. எ-து-இஃதறமெனனறிநது பிறரபொருளைவிருமபாதவறிவுடையாரைததிருமகடானவைடதறகாஙகுறறிவையறிநதககுஉறுசேனசெனறடையுமெனறவாறு.

வி. அடைதறகாஙகு அகாலமுமிடனுஞசெவவியுமுதலாயின-இவையிரணடுபாட்டானுமவெஃகாமையினகுணஙகூறபபட்டது.

பு. (அற-ரு) எ-இ-ள். அறனறிந்து-(இது) தருமமென்றுதெரிந்து, வெஃகா-(பிறர்பொருளை) விரும்பாத, அறிவுடையார்-ஞானமுடையவரை, திரு-இலக்குமியானவள்; திறன

றிந்து-(அடைவதற்கு ஏற்ற) கூறுபாடு அறிந்து, (வகையறிந்து) ஆங்கே-அதினுலேதானே, சேரும்-சேருவாள், எ-று.

வி. அடைதற்கேற்றகூறுபாடு, காலம், இடம், சமையம், முதலானவை. இவையிரண்டுபாட்டாலும், விரும்பாமையின் குணங்கூறப்பட்டது.

௱அ௰. இறலீனுமெண்ணாதுவெஃகின்விறலீனும்
வேண்டாமையென்னுஞ்செருக்கு.

ப. எ-து-பின்விளைவதறியாதொருவன் பிறன்பொருளை வெளவக்கருதின் அக்கருத்தவனுக்கு இறுதியைப்பயக்கும் அப்பொருளை வேண்டாமையென்னுஞ் செல்வம் வெற்றியைப்பயக்குமென்றவாறு.

வி. பகையும்பாவமும் பெருகலின் இறலீனுமென்றும் அப்பொருளை வேண்டியழல்வோராயாவரையுங் கீழ்ப்படுத்தலின் விறலீனுமென்றுங் கூறினார்-செருக்கு காரியப்பெயர்-இதனால் இருமையுமொருங்கு கூறப்பட்டன.

பு. (இ-கு) எ-இ-ள். எண்ணாதுவெஃகின்-(பின்னுண்டாவதை)எண்ணிப்பாராமல்(பிறன்பொருளைக்கைக்கொள்ள) விரும்புவானுைல், (அந்தவிருப்பமானது அவனுக்கு) இறலீனும்-(மரணத்துக்கேதுவாகிய) கெடுதியைத்தரும், வேண்டாமையென்னுஞ்செருக்கு-(அப்பொருளை)விரும்பாதிருப்பது என்கின்றமனக்களிப்பானது, விறலீனும்-(வெற்றிக்கு ஏதுவாகிய) பெருமையைத்தரும், எ-று.

வி. பழியும்பாவமும் உயர்ந்துதரித்திரமேலிடுதலாலே, மரணத்திற்கு ஏதுவென்பதும்; தருமம் உயர்ந்துசெல்வம் பெருகுதலாலே, வெற்றிக்கேதுவென்பதும், வருவிக்கப்பட்டன. பிறன்பொருளைவிரும்பாதிருக்கவே, தருமம் உயரும். உயரவே, செல்வம்பெருகும். பெருகவே, மனக்களிப்பு உண்டாவது நிச்சயம். ஆதலால், வேண்டாமையென்னுஞ்செருக்கெனக்காரியத்தைக்காரணமாக உபசரித்தார். இறல், கேடு. விறல், பெருமை. செருக்கு, மனக்களிப்பு. இதனாலே வெஃகுதல்வெஃகாமைகளின்குற்றமுங்குணமுஞ்சொல்லப்பட்டன.

௧௯. அதிகாரம்.

# புறங்கூறாமை.

ப-ம். புறங்கூறாமை - அஃதாவது - காணாதவழிப் பிறரையிகழ்ந்துரையாமை. மொழிக்குற்றம் மனக்குற்ற மடியாக வருதலா னிஃது அழுக்காறாமை வெஃகாமைகளின்பின் வைக்கப்பட்டது.

பு-ம். (புற-மை) அதாவது - காணாத இடத்துப்பிறரையிகழ்ந்துசொல்லாதிருப்பதைச்சொல்வது. சொற்குற்றமானது மனக்குற்றங்காரணமாகவருமாதலால் இது மனக்குற்றமாகிய அழுக்காறுவெஃகுதல்களையெதிர்மறுத்துரைத்த அழுக்காறாமைவெஃகாமைகளின்பின்வைக்கப்பட்டது.

௱௮௧. அறங்கூறா னல்லசெயினுமொருவன்
புறங்கூறானென்றலினிது.

ப. எ-து - ஒருவ னறனென்று சொல்லுவதுஞ் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும் பிறனைப் புறங்கூறானென்னு முலகத்தாராற் சொல்லப்படுதல் நன்றென்றவாறு.

வி. புறங்கூறாமை அறங்களானிழிக்கப்படாது மேற்பட்டுத்தோன்றுமென்பதாம். இதனா லவ்வறத்தினது நன்மை கூறப்பட்டது.

பு. (அற-து) எ-இ-ள். ஒருவன் அறங்கூறான் - ஒருவன் தருமத்தை (வாயினாலே) சொல்லாதவனாகி அல்லசெயினும் - பாவங்களைச் செய்வானானாலும், புறங்கூறானென்றலினிது - (பிறனைப்,) புறங்கூறானென்று (உலகத்தாராலே) சொல்லப்படுவது இன்பமுடைத்தாம், எ-று.

வி. அறங்கூறானென்பது, அறங்கூறானாகியென, முற்றுவினைஎச்சவினையாய் நின்றது கொடும்பாவியாயினுமென்று சொல்லவந்தவர், அறங்கூறானல்லசெயினுமென்றும், இப்புறங்கூறாமையென்னுந் தருமத்தைக்கைக்கொள்வது மற்றத்தருமங்களைக் கைக்கொள்வதிலுமிகவும் அருமையென்று சொல்லவந்தவர், புறங்கூறானென்றல் இனிதென்றுஞ்சொன்னார். புறங்கூறாமை, யெல்லாக்குற்றங்களையுங்கீழ்ப்படுத்துமென்பது, கருத்து.

௱௮௨. அறனழீஇயல்லவைசெய்தலிற்றீதே
புறனழீஇப்பொய்த்துநகை.

ப. எது-அறனெனபதொனறிலலையெனவழிததுசசொலலியதனமேறபாவஙகளைசசெயதலினுநதீமையுடைததொருவனைககாணாதவழியிகழநதுரையாலழிததுசசொலலிககணடவழியவனொடுபொயததுநகுதலெனறவாறு.

வி. உறழசசிநிரனிறையாகககொளக-அழிததலஒளியைககோறல.

பு. (அற-கை) எ-இ-ள். அறனழீஇ-தருமமென்பதை (இல்லையென்று)கெடுத்துப்பேசி, (அதன்மேல்)அல்லவைசெய்தலின்-பாவங்களைச்செய்வதினும், தீதே-தீமையுடையதே, புறனழீஇ-(ஒருவனைக்) காணாதஇடத்தில் (இகழ்ந்துபேசி அவன்புகழைக்) கெடுத்து, பொய்த்துநகை-(கண்டஇடத்தில் அவனோடு) பொய்யாய்நகைத்தல், எ-று.

வி. இன் உருபு, காட்டிலும் என்னும் உறழ்ச்சிப்பொருள்படநின்றது. இது, முறை நிரனிறைப்பொருள்கோள். அழி என்னுமுதனிலைவினை, அழீஇஎன, அழித்து என்னும்வினையெச்சச்சொல்லினிசைநிரப்புதற்பொருட்டுநீண்டு அளபெடுத்துநின்றது அழித்து என்றது, இங்கேசொல்லினாலேயாதலால், அழித்துப்பேசியென்பதுபெறப்பட்டது. ஒழிந்தஇசையெச்சஞ்சொல்லெச்சங்கள், வருவித்துரைக்கப்பட்டனகாண்க.

௱௮௩. புறங்கூறிப்பொய்த்துயிர்வாழ்தலிற்சாத
லறங்கூறுமாக்கந்தரும்.

ப. எது-பிறனைககாணாதவழியிகழநதுரைததுககணடவழியவறகினியனாகபபொயததொருவனுயிரவாழதலினதுசெயயாதுசாதலவனுககறநூலகள சொலலுமாககததைககொடுககுமெனறவாறு.

வி. பினபுறஙகூறிபபொயததல ஒழிதவீறசாதலாககநதருமெனறா-ஆககமஅஃதொழிநதாமறுமைககணையதுமபயன - அறமஆகுபெயா-தருமெனபதிடவழுவமைதி.

பு. (புற-ம்) எ-இ-ள். புறங்கூறி-(ஒருவனைக்) காணாத இடத்தில் (இகழ்ந்து) பேசி, பொய்த்துயிர்வாழ்தலின்-(கண்டஇடத்தில் அவனுக்கு இனியவனாகப்) பொய்யாய் (ஒருவன்) உயிர்வாழ்வதினும், சாதல்-(அப்படிச்செய்யாமல்) இறந்துபோவது, (அவனுக்கு) அறங்கூறும்-தருமநூல்கள்சொல்லப்பட்ட, ஆக்கந்தரும்-செல்வத்தைத்தரும், எ-று.

வி. பின், புறங்கூறிப்பொய்ப்பது ஒழிதலாலே, சாதல், ஆக்கந்தரும் என்றார். ஆக்கமாவது, புறங்கூறாதிறந்தார்மறு மையிலே அடையுஞ்செல்வம். அறம் என்றது, அறநூலையாத லால், ஆகுபெயர். அவனுக்குக்கொடுக்கும் என்னுமல், தரும் என்றது, இடவழுவமைதி. வழுவமைதி என்பது என்னெனின், இலக்கணநூல்கள்சொல்லப்படுவனவெல்லாம்- இலக்கணமும், வழுவும், வழுவமைதியும், எனமூன்றுவகைப்படும். அவற்றுள், குற்றமில்லாமலிருப்பது, இலக்கணம். வழுவுஎன்பது, குற்றம். வழுவமைதி என்பது, குற்றமாயினுமிது இருக்கலாமென்று அமைத்துக்கொள்ளப்படுவது.

௱அச. கண்ணின்றுகண்ணறச்சொல்லினுஞ்சொல்லற்க
முன்னின்றுபின்னோக்காச்சொல்.

ப. எ-து-ஒருவனெதிரேநின்றுகணணேடடமறசசொனனூயினுமவ னெதிரினறிபபினவருங்குறறததைநோககாதசொலலைசசொலலாதொழிகவெ னறவாறு.

வி. பினனூருபெயா-சொலலுவானறொழிலசொனமேலேறறபபடடது- இவைமூனறுபாடடானுமபுறஙகூறறினதுகொடுமைகூறபபடடது.

பு. (கண்-ல்) எ-இ-ள். கண்ணின்று-(ஒருவனைக்) கண் ணெதிரேநின்று, கண்ணறச்சொல்லினும்-கண்ணோட்டமறப் பேசினாலும் (தாட்சணியங்கெடப்பேசினாலும்,) முன்னின் று-(அவன்) எதிரேயில்லாமல், பின்னோக்காச்சொல், பின்(வரு ங்குற்றத்தை) நோக்காதசொல்லை, சொல்லற்க-சொல்லாதொ ழிக, எ-று.

வி. பின்வருங்குற்றத்தைப்பின் என்றது, ஆகுபெயர். நோக்காதவன்சொல்லுந்தொழிலை, நோக்காச்சொல்லெனச் சொல்வின்மேலேற்றப்பட்டது. இவைமூன்றுபாட்டாலும், புறங்கூறுதலின்கொடுமைசொல்லப்பட்டது.

௱அரு. அறஞ்சொல்லுநெஞ்சத்தானன்மைபுறஞ்சொல்லும்
புன்மையாற்காணப்படும்.

ப. எ-து-புறஞசொலலுவாரொருவனறனைநனறெனறுசொலலினுமது நனமனததாலுயசசொலலுகினறானலலனெனபதனையவனபுறஞசொலலுதற குககாரணமாகியமனபபுனமையாலேயறியபபடுமெனறவாறு.

வி. மனநதிதாகவினசசொறகொளளபபடாதெனபதாம.

பு. (அற-ம்) எ-இ-ள். அறஞ்சொல்லு நெஞ்சத்தானன்மை-(புறங்கூறுவான் ஒருவன் தருமத்தைநன்றென்றுசொன்னாலும்) அதை(நல்ல) மனமுடையவனாகிச்சொல்லுகின்றான் அல்லனென்பதை,புறஞ்சொல்லும்புன்மையாற்காணப்படும். (அவன்) புறங்கூறுதற்குக் (காரணமாகியமனக்) குற்றத்தினாலேகண்டுகொள்ளப்படும், எ-று.

வி. மனந்தீங்கு உடையது ஆதலால், அந்தச்சொல்லைக் கொள்ளப்படாதென்பதாம், இனி, அறஞ்சொல்லும்வாயான் என்னாது, அறஞ்சொல்லுநெஞ்சத்தான் என்றதனால், அந்த அறம்நெஞ்சத்தொடுபட்டது எனக்கொண்டு, பின்பு, அன்மையென்றதனால், நெஞ்சத்தொடுபட்டறத்தைச்சொல்லுவானல்லனாந்தன்மை, எனவருதலால், அறஞ்சொல்லுநெஞ்சத்தானன்மை, என்பதற்கு, அறத்தையுடன்பட்டுச்சொல்லுமனத்தையுடையவன் அல்லனாந்தன்மையை, எனப்பொருளுரைத்து, புறஞ்சொல்லும்புன்மையாற் காணப்படுமென்முடிப்பினது சிறந்துகாட்டியதுபோலும்.

௱அசு. பிறன்பழிகூறுவான்றன்பழியுள்ளுந்
திறந்தெரிந்துகூறப்படும்.

ப. எது-பிறனொருவனபழியையவனபுறததுககூறுமவனறனபழிபலவறறுளளுமுனையுநதிறமுடையவறறைதெரிநதவனாறகூறபபடுமெனறவாறு.

வி. புறததெனபததிகாரததாறபெறறும-இதுவருகினறவறறிறகுமொககும-திறமாகுபெயர-தனனைபபுறஙகூறியவரதுகேடடானககூறியாறகவவளவனறியவனறிறததுபபடடுளையுநதிறததனவாகியபழிகளைநாடியெதிரேகூறுமாகவிறறிறநதெரிநதுகூறபபடுமெனறார.

பு. (பிற-ம்) எ-இ-ள். பிறன்பழிகூறுவான்-பிறனொருவனுடையபழியை (யவன்புறத்திலே) சொல்பவன், தன்பழியுள்ளும்-தன்னுடையபழிகள்பலவற்றுள்ளும்,திறம்-(வருத்தப்படுத்துங்குணக்)கூறுஉடையபழிகளை, தெரிந்து-ஆராய்ந்து (எடுத்து,) கூறப்படும்-(அவனாலே) சொல்லப்படுவான், எ-று.

வி. கூறுவானென்ற இடத்திலே,புறத்து என்பது. அதிகாரத்தாற்பெறப்பட்டது. இதுமேலே வருபவைகளுக்கும்

ஒத்திருக்கும். திறம் என்பது, திறத்தையுடையபழிகளைக்குறி த்து நின்றதினாலே, பண்பு ஆகுபெயர். தன்னைப்புறங்கூறிய தைக்கேட்டவன் அந்தப்புறங்கூறினவனுக்கு அந்தக்கூறிய அம்மாத்திரந்தானேயல்லாமல், அவன்பாற்பட்டுவருத்தப்ப டுத்துங்குணங்களையுடையபழிகளை ஆராய்ந்தெடுத்து அவ னெதிரேசொல்லுவானாதலாலே, திறந்தெரிந்து கூறப்படுமெ ன்றார்.

இனி இதற்குவேறுரை - பிறன்பழிகூறுவான்-வேறொரு வனுடையபழியை(அவன்புறத்திலே) சொல்பவன், தன்பழி-(இப்புறங்கூறுதலாகிய) தன்னுடையநிந்தையை, உள்ளுந்திற ம்-(மேன்மக்கள்)நினைக்குந்தன்மையை, தெரிந்து-(சான்றோ ராலே)தெரிந்துகொண்டபின், கூறப்படும்-சொல்லக்கடவது, எறு.

இதற்கு-வி. இங்கேகூறப்படுமென்றது செயப்பாட்டுவி னையன்று, கூறவேண்டும் என்றதுபோலஉம்மீற்றுவியங்கோ ள்முற்றுவினை. கூறுக-எனின் அமையும்-கூறவேண்டும்; கூறப் படும், எனச்சொல்வது, சொற்பொருள்விரித்தலென்னும் உத் தி.உண்டுவருவான்-என்றால், உண்டபின்வருவான் எனப்பெய ரெச்சப்பொருள்படுதல்போலத்தெரிந்து என்னும்வினையெச் சம், தெரிந்தபின் எனநின்றுகூறப்படுமென்பதனொடுமுடிந்த து. தெரிந்தபின், தன்பழியையுயர்ந்தோர்காணப்படுமாதலாலே, பிறன்பழிகூறவேகூறுவானென்பது நிச்சயமாதலாலதுபற்றித்தெ ரிந்துகூறப்படுமென்றார் எனக்கொள்க. இன்னுங்கூறப்படுமெ ன்பதற்கு இவ்வாறன்றிக், கூறுதல்கூறப்படுதல்என்னுஞ்செய் வினைசெயப்பாட்டுவினையிரண்டினுள்ளும், தெரிந்தபின், இவ னுக்குப்புறங்கூறுதலாகிய செய்வினையொழிதலாற்கூறப்படு மென்றார். இது, நீயிர்பெரிதுமறிதிர், என்பதுபோலக்குறிப் புப்பொருள்படநின்றது. என்னை, புறங்கூறுதவன், அறங்கூறு னல்லசெயினும் அவைபற்றியிகழப்படானாதலாலச்செயப்பா ட்டுவினையுமில்லையென்பது தோன்றநின்றமையின் எனவுங் கொள்க.

௱௮௭. பகச்சொல்லிக் கேளிர்ப்பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடறேற் றாதவர்.

ப. எ-து-தமமைவிடடுநீஙகுமாறறுபுறஙகூறிததஙகேளிரையுமபிரியபபணணுவாகூடிமகிழுமாறினியசொறகளைச சொலலியயலாரொடுநடபாடுதலையறியாதாரெனறவாறு.

வி. சிறபபுமமைவிகாரததாறறொககது-கேளிரையுமபிரிபபரெனறகருததானயலாரொடுமெனபதுவருவிததுரைககபபடடது-அறிதலதமககுறுதியெனறறிதல-கடியுமிடநதேறறுனசோநதனனகைஎனபுழிபபோலததேறறுமைதனவினையாயநினறது-புறஙகூறுவாாககியாவருமபகையாவரெனபதுகருதது.

பு. (பக-ர்) எ-இ-ள். நகச்சொல்லி-மகிழ்ச்சியுண்டாகும்படி (இன்சொற்களைப்) பேசி, நட்பாடல்-(அயலவருடனே) சிநேகஞ்செய்வதை, தேற்றாதவர்-அறியாதவர். பகச்சொல்லி-(தம்மைவிட்டுப்) பிரியும்படியாகப் (புறங்) கூறி, கேளிர்ப்பிரிப்பர்-சுற்றத்தாரையும்பிரியப்பண்ணுவர், எ-று.

வி. கேளிரையும், என்கின்ற உயர்வுசிறப்பு உம்மைகுறைத்துநின்றது. கேளிரையும்பிரிப்பரென்றதனாலே, அயலாரொடு என்பது, வருவிக்கப்பட்டது. அறிதல், தமக்குநன்மையென்றறிதல். தேற்றுதவர் என்பது, அறியாதவர், அறிவியாதவர், எனத்தன்வினைபிறவினையிரண்டினும்வரும். இங்கேயது, தன்வினையாய்நின்றது. தன்வினைபிறவினையென்பதென்னவெனின், நடந்தான்என்றால், நடத்தலைச்செய்தான் எனப்பகுதிவினைப்பொருளைவிகுதிதன்னுள் அடக்கிநிற்பது, தன்வினை. நடப்பித்தான் என்றுல், நடக்கும்படியாகத்தானொருவினையைச்செய்தான் எனப்பகுதிவினைப்பொருளையொழித்துவேறுவினையைவிகுதியுள்ளடக்கிநிற்பது, பிறவினை. அதுசெய்யென்வினைவழியென்னுஞ்சூத்திரநோக்கிக்காண்க. புறங்கூறுவார்க்கு எல்லாரும்பகையாவரென்பது, கருத்து.

௱௮௮. துன்னியார்குற்றமுந்தூற்றுமரபினார்
என்னைகொலேதிலார்மாட்டு.

ப். எ-து-தமமொடுசெறிநதாரதுகுறறததையுமவாபுறததுததூறறுமியலபினையுடையாரயலாாமாடடுசசெயவதியாதுகொலலோவெனறவாறு.

வி. தூற்றுதல் பலருமறியப் பரப்புதல் - அதனிற்கொடியது பிறிதொன்றுகாணாமையின் என்னைகொலென்றார் - செய்வதென்பது சொல்லெச்சம் - என்னர்கொலென்று பாடமோதி இளவியல்பினராவரென்றுரைப்பாருமுளர்.

பு. (துன்-டு) எ-இ-ள். துன்னியார்குற்றமும்-(தம்மோடுமிகுதியுங்) கலந்தவருடையகுற்றத்தையும், தூற்றுமரபினார்-(அவர்புறத்திலேயெல்லாருமறியப்) பரப்பிவைக்குந்தன்மையையுடையவர், ஏதிலார்மாட்டென்னைகொல்-(தம்மொடுகலவாத) அயலாரிடத்தில்யாதுதான்செய்யார், எ-று.

வி. தூற்றுதல், யாவருமறியப்பழியைவிரித்துச்சொல்லுதல் கொடுமைகள்பலவற்றுள்ளும்-இவர் அயலாரிடத்திற்செய்யத்தகாதது இது என்றுநினைக்கப்படுவது ஒன்றுங்காணாததினாலே, என்னைகொலென்றார். செய்யார்-என்பது, சொல்லெச்சம். இனி என்னைகொலென்பதை, என்னர்கொலென்று பாடஞ்சொல்லி, எந்தக்குணத்தையுடையவராவரென்றுபொருள்கூறுவாருமுண்டு.

## ௱௮௯. அறனோக்கியாற்றுங்கொல்வையம்புறனோக்கிப் புன்சொலுரைப்பான்பொறை.

ப. எது - பிறர்நீங்கினவளவுபார்த்து அவர்பழித்துரையையுரைப்பானுடற்பாரத்தைநிலமிக்கொடியதுபொறுத்தலேயெனக்கறமாவதெனக்கருதிப் பொறுக்கின்றதுபோலுமென்றவாறு.

வி. எல்லாவற்றையும் பொறுத்தலியல்பாயினுமிது பொறுத்தற்கரிதெனனுங்கருத்தால் அறனோக்கியாற்றுங்கொலென்றார் - இவ்வையந்துப்பட்டானும் புறங்கூறுவாராகச்செய்துங்குற்றங்கூறப்பட்டது.

பு. (அற-றை) எ-இ-ள். புறனோக்கி-பிறர்நீங்கின இடம்பார்த்து, புன்சொலுரைப்பான்-(அவர்குற்றங்களைக்காட்டுகின்ற)ஈனவார்த்தைகளைச்சொல்லுபவனுடைய, பொறை-(உடலின்) பாரத்தை, வையம்-பூமியானது, அறனோக்கியாற்றுங்கொல்-(இப்படிப்பட்டகொடியதைச்சுமக்கிறதேயெனக்குத்) தருமமென்றுநினைத்துத்தானேசுமக்கின்றது, எ-று.

வி. பூமியெல்லாவற்றையுஞ்சுமப்பது சுபாவமானாலும், இதுசுமப்பதற்கு அரிதென்னுங்கருத்தினாலே, அறனோக்கியாற்றுங்கொலென்றார். கொல் என்னும்இடைச்சொல், இங்கே சந்தேகப்பொருள்படநின்றது. கொல்லேயைய மசைநிலைக்

கூற்றே, என்னுஞ்சூத்திரநோக்கிக்காண்க. இவையைந்துபாட்டாலும், புறங்கூறுவார்க்குவருங்குற்றஞ்சொல்லப்பட்டது.

௱௯௰. ஏதிலார்குற்றம்போற்றங்குற்றங்காண்கிற்பிற்
றீதுண்டோமன்னுமுயிர்க்கு.

ப. ஏது-ஏதிலாரைப்புறங்கூறுவார் தற்கவர்குற்றங்காணுமாறுபோலப் புறங்கூறலாகிய தங்குற்றத்தையுங் காணவல்லராயினவர் நிலைபேறுடையவுயிர்க்குவருவதொரு துன்பமுண்டோவென்றவாறு.

வி. நடுவுநின்றுபக்கங்காண்டலருமைநோக்கிக் காண்கிற்பினென்றுங் கண்டவழியொழிதலிற் பாவமின்றாமாகவே வரும்பிறவிகளினுந்துன்பமில்லையென்பதுநோக்கியுயிர்க்குத்தீதுண்டோவென்றுங்கூறினார் - இதனாற்புறங்கூறற்றொழிதற்குபாயங்கூறப்பட்டது.

பு. (ஏதி-கு) எ-இ-ள். ஏதிலார்குற்றம்போல்-(அயலாரைப்புறங்கூறுபவர் அதற்காக) அவர்குற்றங்களைக்காண்பது போல், தங்குற்றங்காண்கிற்பின்-(புறங்கூறுதலாகிய) தம்முடையகுற்றத்தையுங்காண்பாரானால், மன்னுமுயிர்க்குத்தீதுண்டோ-(அவருடைய)நிலைபெறும்உயிர்க்கு (வருவதுஒரு) துன்பமுண்டாமோ, (இல்லை) எ-று.

வி. நடுவுநிலைமையிலேநின்றுசமனுகக்காண்பது அருமையாதலால், காண்கிற்பின் என்றும்; கண்டபோதுபுறங்கூறுராதலாலே, பாவமில்லையாம். அது இல்லையாகவேவரப்பட்டபிறவித்துன்பங்களுமில்லையென்பது நோக்கிமன்னுமுயிர்க்குத்தீதுண்டோவென்றும்; சொன்னூர். காண்கிற்பின் என்னும் எதிர்காலவினையெச்சம், உண்டோ என்னுமெதிர்மறையோகாரத்தையீற்றிலேகொண்டகுறிப்புவினைகொண்டுமுடிந்தது. அதனுள், காண், என்பதுபகுதி. பகரஒற்று. எதிர்கால இடைநிலை. இன் என்பது, வினையெச்சவிகுதி. கில் எனஇடைநின்றது, சாரியைஇடைச்சொல். இதினுலே, புறங்கூறுவதொழிதற்கு உபாயஞ்சொல்லப்பட்டது.

## உ௰. அதிகாரம்.

# பயனிலசொல்லாமை.

---

ப-ம். பயனிலசொலலாமை-அஃதாவது-தமககுமபிறாககுமறமபொருளினபமாகியபயனகளுளொனறுமபயவாதசொறகளைசசொலலாமை-பொயகுறளைகடுஞசொறபயனிலசொலலெனவாககினகணிகழுமபாவநானகனுட பொயதுறநதாாககலலதொருகாலபாககடியபபடாமையினஃதொழிநதவாழவாாறகடியபபடுமேனைமூனறனுட கடுஞசொலினியவைகூறலானுங்குறளைபுறஙகூறாமையானுமவிலககிநினறபயனிலசொலவிதனாலவிலககுகினறாராகலினிதுபுறஙகூறாமையினபினவைககபபடடது.

பு-ம். (பய-மை) அதாவது, தமக்கும்பிறர்க்கும் அறம் பொருள் இன்பம் ஆகியபிரயோசனங்களில் ஒன்றுங்கொடாதசொற்களைச்சொல்லாதிருப்பதைச்சொல்வது. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல், என்று வாக்கினிடத்திலே நடக்கப்பட்டபாவம் நான்கு. அவற்றுள், பொய்துறவறத்தார்க்கல்லது தள்ளப்படாமையின் அதைநீக்கி, இல்லறத்தாராலே தள்ளப்படும் மற்றமூன்றுக்குள், கடுஞ்சொல், இனியவைகூறலாலும்; குறளை, புறங்கூறாமையாலும், விலக்கிநின்ற, பயனில்சொல் இதனாலே விலக்குகின்றாராதலால் இதுபுறங்கூறாமையின்பின்வைக்கப்பட்டது.

௱௯௧. பல்லார்முனியப்பயனிலசொல்லுவா
னெல்லாருமெள்ளப்படும்.

ப. எது-அறிவுடையாாபலருஙகேடடுவெறுபபபயனிலவாகியசொறகளைசசொலலுவானெலலாராலுமிகழபபடுமெனறவாறு.

வி. அறிவுடையாாபலருமவெறுபபவேயொழிநதாருமிகழபபடுதலினெலலாருமெளளபபடுமென்றா—மூனறனுருபுவிகாரததாறறொககது.

பு. (பல்-ம்) எ-இ-ள். பல்லார்முனிய-(அறிவுடையாராகிய) பலருங் (கேட்டு) வெறுக்கும்படியாக, பயனிலசொல்லுவான்—பிரயோசனமில்லாத சொற்களைச்சொல்பவன், எல்லாருமெள்ளப்படும்-யாவராலும் நிந்திக்கப்படுவான், எ-று.

வி. பயனைஆராய்தற்கு உரியார் அவராதலால், இங்கே பல்லார் என்றது அறிவுடையார்மேலேநின்றது. அறிவுடையார்பலரும்வெறுக்கவே, அதுநோக்கி ஒழிந்தவரும் வெறுப்

பாராதலால், எல்லாருமெள்ளப்படும் என்றார். எல்லாரும் என்ற இடத்தில், எல்லாராலும்என்ற மூன்றும்வேற்றுமையுருபு (தொக்கு) குறைந்துநின்றது. அது, செய்யுள்விகாரம். செய்யுள்விகாரமென்பது, என்னவெனின், செய்யுள், என்பது-பாட்டு. அதனுள்-அசை, சீர், தளை, அடி, தொடை, சந்தம், முதலியவைகெடாமைப்பொருட்டுவருகின்றதென்பதுவவைவிகாரம். விகாரம்,வேறுபாடு. அந்தவேறுபாட்டை, வலித்தன்மெலித்த னீட்டல்என னுஞ்சூத்திரத்தாலும்,ஒருமொழிமூவழி-என்னுஞ் சூத்திரத்தாலும் அறிக. அவற்றுள்-இந்தவிகாரம், சீருஞ்செப் பலோசையுங்குறித்துவந்ததொகுத்தல்விகாரம், என்னெனின் வெண்பாவிலே, நாலசைச்சீர்வருதற்கு இலக்கணமில்லை; வெண்பாவினவாநேரசையாலிற்ற மூவசைச்சீர் என்றறினுலே, எல்லாராலும் என விரிந்துநின்றால்; நாலசைச்சீராய்ச்செப்பலோசைகெட்டுநிற்குமாதலால், எல்லாரும் எனக்குறைந்துநின்றுதொகுத்தல்விகாரத்தைப்பெற்றுச்சீருஞ்செப்பலோசையுங்கெடாமல் நின்றதுகாண்க. செப்பலோசை, வெண்பா ஓசை. ஓசை, ஒலியின்பண்பாகிய சந்தம்.

## ௱கூஉ. பயனிலபல்லார்முற்சொல்லனயனில நட்டார்கட்செய்தலிற்றீது.

ப. எது-பயனிலவாகியசொறகளையறிவுடையாாபலாமுனபேயொருவனசொலலுதலவிருபபமிலவாகியசெயலகளைததனனடடாாமாடடுசசெயதலினுநதீதெனறவாறு.

வி. விருபபமிலவெறுபபன-இசசொலஅசசெயலினுமிகவிகழறபாடுபெயகுமெனபதாம.

பு. (பய-து.) எ-இ-ள். பயனில பிரயோசனமில்லாத (சொற்களை,)பல்லார்முற்சொல்லல்- அறிவுடையாராகிய)பலர் முன்பு (ஒருவன்) சொல்வது, நயனில-விருப்பமில்லாதவையாகிய (செயல்களை,) நட்டார்கட்செய்தலிற்றீது-(தன்) சிநேகிதரிடத்துச்செய்வதைக்காட்டிலுந் தீமையுடையதாம், எ-று.

வி. சொல்லல் என்றதனால்: பயனில-என்பது சொர்களென்பதும்; செய்தல்என்றதனால், நயனில-என்பது செயல்களென்பதும்; பெறப்பட்டன. விருப்பமிலவாவன, வெறு

க்கத்தக்க பாவச்செய்கைகள் இந்தப்பயனிலாதனவற்றைச் சொல்லுதல், அந்த நயனிலாதனவற்றைச்செய்தலினும்நிந்திக்கப்படுவதையுண்டாக்கும் என்பதுகருத்து.

௱௯௫. நயனிலனென்பதுசொல்லும்பயனில
பாரித்துரைக்குமுரை.

ப. எது-பயனிலவாகியபொருள்களையொருவனவிரிததுரைககுமுரைதானேயிவனநீதியிலனெனபதனையுரைககுமெனறவாறு.

வி. உரையாலிவனயனிலனெனபதறியலாமெனபாரதனையுரைமேலேறறியுரைசொலலுமெனறார.

பு. (நயடை) எ-இ-ள். பயனில - பிரயோசனமில்லாத (பொருள்களை,) பாரித்துரைக்குமுரை - (ஒருவன்) விரித்துச் சொல்லுஞ்சொல்லுத்தானே, நயனிலனென்பது சொல்லும்- (இவன்)நீதியில்லாதவனென்பதைச்சொல்லும், எ-று.

வி. அவன்சொல்லப்பட்டசொல்லினாலே, யிவன்நீதியில்லாதவனென்பதை அறியலாமென்று சொல்லவந்தவர், அதை உரையின்மேலேற்றி, யுரைசொல்லுமென்றார்.

௱௯௬. நயன்சாராநன்மையினீக்கும்பயன்சாராப்
பண்பில்சொற்பல்லாரகத்து.

ப. எது-பயனொடுபடாதபணபிலசொறகளையொருவனபலரிடைசசொலலுமாயினவையாவாமாட்டுநீதியோடுபடாவாயவனை நறகுணஙகளினீககபபடுமெனறவாறு.

வி. பணபுஇனிமையுமெயமையுமுதலாயினசொறகுணஙகள-சொலலினெனபதுமயாவாமாடடெனபதுமெசசமாயவருவிககபபடடன.

பு. (நய-து) எ-இ-ள். பயன்சாரா-பிரயோசனத்தொடு கூடாத, பண்பில்சொல்-(இனிமையும் உண்மையுமுதலாகிய) குணமில்லாதசொற்களை, பல்லாரகத்து-(ஒருவன்) பலரிடத்திற் (சொல்லுவானாகில்அவைதாமேயெல்லாரிடத்தும்,) நயன்சாரா- நீதியொடுகூடாதவையாகி, (அவனை) நன்மையினீக்கும்-நற்குணங்களிலேநின்றுநீக்கிவிடும், எ-று.

வி. சொல்லின்-என்பதும், எல்லாரிடத்தும் என்பதும், வருவித்துரைக்கப்பட்டன.

ாகூரு. சீர்மைசிறப்பொடுநீங்கும்பயனில
நீர்மையுடையார்சொலின்.

ப. எ-து - பயனிலவாகியசொறகளையினியநீரமையுடையாரசொலலுவராயினவரதுவிழுபபமுமதனாலவருநனகுமதிககறபாடுமுடனேநீஙகுமெனறவாறு.

வி. நீரமைநீரினறனமை-சொலவினெனபதுசொலலாமையைவிளககிறறு.

பு. (சீர்-ன்)எ-இ-ள் பயனில-பிரயோசனமில்லாத(சொற்களை,) நீர்மையுடையார்சொலின்-நற்குணமுடையவர்சொல்லுவராயின், (அவருடைய) சீர்மை-புகழானது, சிறப்பொடுநீங்கும்-(யாவருமதிக்கப்பட்ட) பெருமையோடேகூட ஒதுங்கிப்போம், எ-று.

வி. சொல்லின் என்பது, சொல்லார் என்பதைவிளக்கிநின்றது. ஒடு, ஒருவினையுடனிகழ்ச்சிப்பொருள்படநின்றமூன்றும்வேற்றுமையுருபு.

ாகூசா. பயனில்சொற்பாராட்டுவானைமகனென்னன்
மக்கட்பதடியெனல்.

ப. எ-து - பயனிலலாதசொறகளைபபலசாலுஞசொலலுவானைமகனெனறுசொலலறகமககளுடபதரொனறுசொலலுகவெனறவாறு.

வி. அலவிகுதிமுனனெதிாமறையிலுமபினவியஙகோளிலுமவநதது அறிவெனனுமுளளீடினமையினமககடபதடியெனறா-இவையாறுபாடடாலும பயனிலலாதசொறகளைசசொலலுதலினகுறறஙகூறபபடடது.

பு. (பய-ல்) எ-இ-ள். பயனில்சொல்-பொருளில்லாத சொற்களை, பாராட்டுவானை-மேன்மேலும்புகழ்ந்துசொல்பவனை, மகனெனல்-ஆண்மகனென்றுசொல்லாதொழிக, மக்கட்பதடியெனல்-ஆண்மக்களுள்ளேபதரொன்றுசொல்லுக, எ-று.

வி. எனல், என்னும்வியங்கோண்முற்றுவினையிரண்டினுள்ளேமுன்னையது, எதிர்மறையிலும்; பின்னையது, உடன்பாட்டிலும்வந்தது. அதுகயவொடு ரவ்வொற்றல்லாலும் மாரொகாணீற்றவியங்கோ்ண் முற்றவையெய்து மிடம்பாலெங்குமென்ப.என்னுஞ்சூத்திரம்நோக்கிக்காண்க. உடன்பாடு,எதிர்மறை, என்பனயாவை எனின் - எந்தச்சொல்லிலேகாலத்தொடுபட்ட

வினையுடன்பட்டுநிற்குமேல், அதுஉடன்பாட்டுவினை என்றும், இந்த உடன்பாட்டுவினை இனிச்சொல்லும்வினைக்கு எதிராதலால், அதை மறுத்துநிற்கும்வினை, எதிர்மறைவினையென்றுஞ் சொல்லப்படுபவையாமெனக்காண்க. எடுத்தல், எடை. தொடுத்தல், தொடை. என்றாற்போல, மறுத்தல், மறையெனநின்றது. பாராட்டுதல், புகழ்ந்துசொல்லுதல். அது, பொய்பாராட்டலென்னும் அகப்பொருட்களவியலின் துறைநோக்கிக் காண்க. இனிஇரட்டுறமொழிதலென்னும் உத்தியினாலே, இவர் பயனில்சொல்லென்றமாத்திரமே, அரிசியில்லாதநெல் எனவும், பொருளில்லாதசொல்லெனவும், பொருந்தவைத்தாராதலால்; அரிசியில்லாதநெல்லை நெற்பதரென்பதுபோலப்பொருளில்லாத சொல்லைச்சொற்பதரெனவும்; அதைப்புகழ்ந்து சொல்பவனுள்ளே-அரிசியும், பொருளும், போன்ற அறிவில்லாமையின், மக்கட்பதரெனவும், இவையெல்லாம் உய்த்துணரவைத்தமையால் உய்த்துணர்வைப்பென்னு முத்தியும்பெறநின்றதிக்குறளெனக்காண்க. எழுவாய்ப்பயனிலை என்றஇடத்துப்பயனிலையென்றது, பொருள்நிற்கும் நிலையையாதலாற்பயன் என்பது, பொருள். அதுநெல்லைவிசேடித்துநிற்கும்போது, அரிசிப்பொருளில்லாதநெல்லெனக்கொள்க. இவையாறுபாட்டாலும், பயனில்லாத சொற்களைச்சொல்லுதலின்குற்றஞ்சொல்லப்பட்டது.

௱௯௭. நயனிலசொல்லினுஞ்சொல்லுகசான்றோர்
பயனிலசொல்லாமைநன்று.

ப. எது-நீதியொடுபடாதசொறகளைசசானறோசொனனாராயினுமஃதமையுமபயனிலவறறைசசொலலாமைபெறினதுநனறெனறவாறு

வி. சொலவினுமெனவேசொலலாமைபெறபபடடது-நயனிலவறறினுமபயனிலதீயவெனபதாம.

பு. (நய-று) எ-இ-ள். நயனில-இன்பமில்லாத (சொற்களை, சொல்வினுஞ்சொல்லுக-(ஒவ்வோரிடங்களிற்) சொல்லவேண்டினுஞ்சொல்லியமைக, சான்றோர்-இல்லறம்நிறைந்தவர், பயனில-பிரயோசனமில்லாத (சொற்களை,) சொல்லாமை நன்று-(எவ்விடத்தும்) சொல்லாதிருப்பதுநன்மை, எ-று.

வி. வேம்புங்கடுவும்போல்வனவெஞ்சொற்
ருங்குதலின்றிவழி நனிபயக்கு மோம்படைக்கிளவி யென்பராதலால், இல்லறநடத்துதற்பொருட்டு ஒரோவழிப் பிரயோசனத்தைத்தருகின்றகடுஞ்சொல்லுஞ்சொல்லவேண்டு தலாற்சொல்லினுஞ்சொல்லுகஎன்றும்; அந்த இடத்துமின் சொல்லினாலேதானேபிரயோசனப்படுத்துவது மிகவும்நன்று என்பதுதோன்றச்சொல்லினும், என இழிவு சிறப்புஉம்மை கொடுத்தும்;ஒருபொழுதும்வாழ்வதுணராமைநிச்சயமாதலா லே, தமக்காயினும் பிறர்க்காயினும் பிரயோசனப்படாதசொ ற்களைச்சொல்லி வீணேகாலம்போக்குதல், கூடாதாதலாலும், அறிவுடையோரவனைமக்கட்பதரெனப்புறம்போக்குவராதலா லும், அவர்புறம்போக்கவே, எனையறிவில்லாதவரோசுற்றமாக ச்சூழ்ந்துவிரைந்துகெடுப்பராதலாலும், அச்சொற்களைச்சொ ல்லாது நாவையடக்கி மனத்தையு மொடுக்கினவர்க்கு அந்த அறந்தானே, யெல்லாநன்மைகளையுந்தருமாதலால், பயனில சொல்லாமை நன்றென்றும், சொன்னார். ஒரோரிடத்து என் பதும், எவ்விடத்தும் என்பதும், குறைந்துநின்றன. நயன், இன்பம். ஓம்படைக்கிளவி, பாதுகாப்புக்கு அடுத்தசொல். பாதுகாப்பு, இரட்சிப்பு. நயனிலவற்றிலும் பயனிலகொடிய வையென்பது, கருத்து.

௱௯௮. அரும்பயனாயுமறிவினர்சொல்லார்
பெரும்பயனில்லாதசொல்.

ப. எது-அறிதற்கரியபயன்களையாராயவல்லவறிவினையுடையார்மிக்க பயனுடையவல்லாதசொற்களைச்சொல்லாரென்றவாறு.

வி. அறிதற்கரியபயன்களாவன வீடுபேறுமேற்கதிச்செலவுமுதலாயின பெருமபயனிலலாதவெனவேபயனசிறிதுடையனவுமொழிககபபட்டன.

பு. (அரு-ல்) எ-இ-ள். அரும்பயனாயுமறிவினர்-(அறிதற் கு) அருமையாகியபிரயோசனங்களையாராயவல்ல அறிவுடைய வர், பெரும்பயனில்லாதசொல்-பெரிதாகிய் பிரயோசனமில் லாதசொற்களை, சொல்லார்-சொல்லமாட்டார், எ-று.

வி. அரும்பயன்களாவன, வீடுபெறும்பேறும்மற்றமேலானபதவிகளையடைவதும்முதலானவை. பெரும்பயனில்லாதவெனவே, பயன்சிறிதுள்ளவையும் ஒழிக்கப்பட்டன.

௱௯௯. பொருடீர்ந்தபொச்சாந்துஞ்சொல்லார்மருடீர்ந்த
மாசறுகாட்சியவர்.

ப. எ-து-பயனினீங்கியசொற்களைமறந்துஞ்சொல்லார்மயக்கத்தினீங்கியதூயவறிவுடையார்-என்றவாறு.

வி. தூயவறிவுமெய்யறிவு-மருடீர்ந்தவென்னும்பெயரெச்சங்காட்சியவரென்னுங்குறிப்புப்பெயர்கொண்டது-இவைமூன்றுபாட்டானும்பயனில்சொல்லாமையின்குணங்கூறப்பட்டது.

பு. (பொ-ர்) எ-இ-ள். பொருடீர்ந்த-பயனீங்கிய(சொற்களை,) பொச்சாந்துஞ்சொல்லார் - மறந்துஞ்சொல்லமாட்டார், மருடீர்ந்த - மயக்கம்நீங்கிய, மாசறுகாட்சியவர்-குற்றமற்ற, (பரிசுத்தமான) அறிவுடையவர், எ-று.

வி. பரிசுத்த அறிவு, மெய்யறிவு. மருடீர்ந்தவென்னும் பெயரெச்சவினை, காட்சியவர்என்னுங்குறிப்புவினையால்அணையும்பெயர்கொண்டுமுடிந்தது. இவைமூன்றுபாட்டாலும், பயனிலவாகிய சொற்களைச்சொல்லாமையின்குணஞ்சொல்லப்பட்டது.

உ௱. சொல்லுகசொல்விற்பயனுடையசொல்லற்க
சொல்விற்பயனிலாச்சொல்.

ப. எ-து-சொற்களிற்பயனுடையசொற்களைச்சொல்லுகசொற்களிற்பயனிலாதசொற்களைச்சொல்லாதொழிகவென்றவாறு.

வி. சொல்லின்னென்பதிருவழியுமிகையாயினுஞ்சொற்பொருட்பின்வருநிலையென்னுமணிதோன்றவந்தது-வைகலும்வைகல்வரக்கண்டுமென்பதுபோல-இதனாற்சொல்லப்படுவனவும்படாதனவும்-நியமிக்கப்பட்டன.

பு. (சொ-ல்)எ-இ-ள். சொல்விற்பயனுடையசொல்லுக-சொற்களிலேபிரயோசனமுடையசொற்களைச் சொல்லியமைக, சொல்விற்பயனிலாச்சொல்சொல்லற்க - சொற்களிலேபிரயோசனமில்லாதசொற்களைச்சொல்லாதொழிக, எ-று.

வி. சொல்லின் என்பது, இரண்டிடத்தும் அதிகமானாலும்சொற்பொருட்பின்வருநிலையென்னும் அலங்காரத்தைக்குறி

த்துவந்தது. என்னவெனின், முன்வருசொல்லும்பொருளும் பலவயிற்பின்னும்வருமெனிற்பின்வருநிலையே என்னும் அணி இலக்கணச்சூத்திரநோக்கிமுன்வந்தசொல்லுத்தானேபின்பல விடத்தும்வருவது, சொற்பின்வருநிலை அணியெனவும், முன் வந்தபொருள்தானேபின்பலவிடத்தும்வருவது, பொருட்பி ன்வருநிலையணியெனவும், முன்வந்தசொல்லும் பொருளும்பி ன்பல இடத்தும்வருவன, சொற்பொருட்பின்வருநிலை அணி யெனவும், காண்க. இதிலே, சொல்லுகஎன்னும்வியங்கோள்மு ற்றின்பகுதிமுன்வந்தபொருள் அதுசொல்லற்கஎன்னும்எதிர் மறைவியங்கோள்முற்றிற்கும்பின்வந்தது எனவும்; சொல்லின் என்பதிற்சொல் என்பது, பின்னும்வந்தசொல்லாதலால்அது, சொற்பின்வருநிலை; ஆகஇரண்டுங்கூட்டச்சொற்பொருட்பின் வருநிலையணியெனக்கொள்க. இதிஞலே, சொல்லப்படுபவை யும்படாதவையுமாகியவிரண்டுஞ்சொல்லப்பட்டன.

இனியிதற்குவேறோர்முடிபு. சொல்லின்-சொல்லவேண் டுமாயின், பயனுடைய-பிரயோசனமுடையசொற்களை, சொ ல்லுக-சொல்லியமைக,சொல்லின்-சொல்லுதலினுலே, (அடை யப்படும்) பயனிலாச்சொல்-பிரயோசனமில்லாதசொற்களை, சொல்லற்க-சொல்லாதொழிக, எறு.

இதற்கு-வி. சொல்லின் என்பன இரண்டினுள்முன்னைய து, செய்யின்என்னும்வாய்பாட்டுவினையெச்சமெனவும்;பின் னையது, முதனிலைத்தொழிற்பெயர் இன்னுருபேற்றதென வும; கொள்க.

---

உக. அதிகாரம்.

# தீ வி னை ய ச் ச ம்.

---

ப-ம. தீவினையசசம-அஃதாவது-பாவஙகளைசசெயதறகஞசுதல-இதனுனமெயயினகணிகழுமபாவஙகளெலலாநதொகுததுவிலககுகினறாராக வினிதுபயனிலசொலலாமையினபினவைககபபடடது.

பு-ம். (தீ-ம்) அதாவது, பாவங்களைச்செய்வதற்குஅஞ் சுவதைச்சொல்வது. இந்த அதிகாரத்திஞலே சரீரத்திஞலே

செய்யப்படும் பாவங்களையெல்லாந்தொர்குத்துவிலக்குகின்றா ராதலாலேமுன்வாக்கினாலே சொல்லப்பட்டபயனிலசொல்லாமையின்பின்வைக்கப்பட்டது.

உ௱க. தீவினையாரஞ்சார்விழுமியாரஞ்சுவர்
தீவினையென்னுஞ்செருக்கு.

ப. இ-து-தீவினையென்றுசொல்லப்படுமயக்கத்தைமுன்செய்ததீவினையுடையாரஞ்சார்; அஃதிலராகியசீரியாரஞ்சுவரென்றவாறு.

வி. தீவினையென்னுஞ்செருக்கென்கக்காரியங்காரணமாகவுபசரிக்கப்பட்டது-மேற்றொட்டுச்செய்துகைவந்தமையானஞ்சாரென்றுஞ்செய்தறியாமையானஞ்சுவரென்றுங்கூறினார்,

பு. (தீ-கு) எ-இ-ள். தீவினையென்னுஞ்செருக்கு-பாவமென்றுசொல்லப்பட்ட அகங்காரத்துக்கு, தீவினையாரஞ்சார் (முன்செய்த) பாவத்தையுடையவர்பயப்படார், விழுமியாரஞ்சுவர்-(அந்தப்பாவமில்லாதவராகிய) சிறப்புடையவர்பயப்படுவார், எ-று.

வி. செருக்கு,அகங்காரம். தீவினையென்னுஞ்செருக்கென க்காரணத்தைக்காரியமாகஉபசரித்தார்,அகங்காரமேதீவினைக்குக்காரணமென்பதும்; அது இல்லாவிட்டால், தீவினையில்லையென்பதும்; தோன்றுதற்கு. பூருவந்தொடங்கிச்செய்துவந்திருப்பதினாலேதீவினையாரஞ்சாரென்றும், என்றுஞ்செய்தறியாததினாலேவிழுமியாரஞ்சுவரென்றும், சொன்னார்.

உ௱உ. தீயவைதீயபயத்தலாற்றீயவை
தீயினுமஞ்சப்படும்.

ப. இ-து-தனக்கின்பம்பயத்தலைக்கருதிச்செய்யுந்தீவினைகளபின்னஃதொழிந்துதுன்பமேபயத்தலாலத்தன்மையவாகிய தீவினைகளொருவனாற்றீயினுமஞ்சப்படுமென்றவாறு.

வி. பிறிதொருகாலத்தும்பிறிதொருதேயத்தும்பிறிதொருடம்பினுஞ்சென்றுசுடுதற்கின்மையிற்றீயினுமஞ்சப்படுவதாயிற்று.

பு. (தீ-ம்) எ-இ-ள். தீயவை-(தனக்குஇன்பந்தருவதைக்குறித்துச்செய்யப்பட்ட) தீவினைகளானவை-(பின்பு,) தீயபயத்தலால்-(அவற்றின்பயனாகிய) துன்பங்களைத்தருவதினாலே,

தீயவை-அந்தத்தீவினைகள், தீயினும்-தீயிலும் அதிகமாக, அஞ்சப்படும்-(ஒருவனாலே) பயப்படப்படும், எ-று.

வி. இந்தத்தீவினைகளைப்போலே, மற்றொருகாலத்தும் மற்றொரு இடத்தும் மற்றொருதேகத்தும்விடாது பின்தொடர்ந்துசுடுவதுநெருப்பினுக்கு இல்லையாதலாலே, தீயினும்அஞ்சப்படும் என்றார். தீய-என்றது, தீவினைப்பயன்களையெனக்கொள்க.

௨௱௩. அறிவினுளெல்லாந்தலையென்பதீய
செறுவார்க்குஞ்செய்யாவிடல்.

ப. எது-தமககுறுதிநாடுமறிவுகளெலலாவறறுளளுநதலையாயவறிவெனறுசொலலுவாநலலோாதமமைசசெறுவாாமாடடுநதீவினைகளைசசெயயாது விடுதலையெனறவாறு.

வி. விடுதறகுககாரணமாகியவறிவைவிடுதலெனறுஞசெயயததககுவழியுஞசெயயாதொழியவேநமககுததுனபமவாராதெனவுயததுணாதலினதனையறிவினுளெலலாநதலையெனறுஙகூறினா-செயயாதுஎனறறகுசசெயயாஎனககடைககுறைநதுநினறது-இவைமூனறுபாடடானுநதீவினைககஞசவேணடுமெனபதுகூறபபடடது

பு. (அ-ல்) எ-இ-ள். தீய-தீவினைகளை, செறுவார்கரும்-(தம்மைப்) பகைப்பவரிடத்திலும், செய்யாவிடல்-செய்யாதொழிவதை, அறிவினுளெல்லாம்-(தமக்கு நன்மையாராயப்பட்ட) அறிவுகளெல்லாவற்றிலும், தலையென்ப-முதன்மையாகிய (அறிவு) என்றுசொல்லுவர் (நல்லோர்,) எ-று.

வி. செறுவாருள்ளும் எனவேண்டிய ஏழாம்வேற்றுமையுருபின்பொருளிலே, கு-என்னும் நான்காம்வேற்றுமையுருபுதடுமாறிநின்றது, உருபுமயக்கம். விடுதற்குக்காரணமாகிய அறிவை, விடல் என்றும்; செய்யத்தகுமான இடத்தும்செய்யாதுவிட்டுவே, இனிநமக்குத்துன்பம்வாராதென்றுகடந்து அறிதலால், அதை அறிவினுளெல்லாந்தலையென்றும்; சொன்னார். தலை, ஆகுபெயர். செய்யாது என்னும், எதிர்மறைவினையெச்சம், கடைக்குறைந்துசெய்யா எனநின்றது. இவைமூன்றுபாட்டாலுந்தீவினைக்கு அஞ்சவேண்டுமென்பது, சொல்லப்பட்டது.

௨௱௪. மறந்தும்பிறன்கேடுசூழற்கசூழி
னறஞ்சூழுஞ்சூழ்ந்தவன்கேடு.

ப. எது-ஒருவனபிறாககுககேடுபயககுமவினையைமறநதுமெணணு தொழிகவெணணுவனுபிறறனககுககேடுபயககுமவினையயறககடவுளெணணு மெனறவாறு.

வி. கேடெனபவனவாகுபெயா - சூழகினறபொழுதேதானுமுடனேசூழதலிவனபிறபடிஞுமறககடவுணமுறபடுமெனபதுபெறபபடடது-அறககடவுளெணணுவதாவதவனகெடததானீஙகநினைததல-தீவினையெணணுவுமாகாதெனபதாம.

பு. (ம-டு) எ-இ-ள். மறந்தும்-மறந்தானுலும், பிறன்-ஒருவன், கேடு-(பிறர்க்குக்)கேடுதருந்தீவினையை,சூழற்க-எண்ணுதொழிக, சூழின்-எண்ணுவானுனல், சூழ்ந்தவன்கேடு-எண்ணினவனுக்குக்கேடுதருந்தீவினையை, அறஞ்சூழும்-தருமதேவதையெண்ணும், எ-று.

வி. கேடு என்பவையிரண்டும், காரிய ஆகுபெயர். எண்ணுகின்றபொழுதேயறக்கடவுளெண்ணுதலால், அவனினுந்தான்முற்படுமென்பதுபெறப்பட்டது. தருமதேவதைஎண்ணுவதாவது, அவன்கெடும்படியாகத்தான்நீங்கநினைப்பது. தீவினையை எண்ணுதலும், ஆகாதென்பதாம்.

௨௱௫. இலனென்றுதீயவைசெய்யற்கசெய்யி
னிலனுகுமற்றும்பெயர்த்து.

ப. எது-யானவறியனெனறுகருதியதுதீாதறபொருடடுபிறாககுககேடடையொருவனசெயயாதொழிகசெயவனுபிறபெயாததுமவறியனுமெனறவாறு.

வி. அனவிகுதிமுனறனிததனமையினுமபினபடாகையொருமையினுமவநதது-தனிததனமை-உளனுலெனனுமையுணடெனபதனுனுமறிக-இலமெனறுபாடமோதுவாருமுளா-அததீவினையாறபிறவிதோறுமிலனுமெனபதாம-பொருளானவறியனெனககருதிததீயவைசெயயறகசெயயினபொருளாேனயனறிநறகுணநறசெயகைகளானுமவறியனுமெனறுஙாபபாருமுளா - மறறுமசைநிலை.

பு. (இல-து) எ-இ-ள். இலனென்று-(நான்) தரித்திரனென்று (நினைந்து அதுதீரும்பொருட்டாக,) தீயவைசெய்யற்க-(பிறர்க்குக்கேடுதருந்) தீவினைகளை (ஒருவன்) செய்யா

தொழிக, செய்யின்-செய்வானுனால், இலனாகுமற்றும்பெயர்த்து-மறுபடியும் அதிகதரித்திரனுவான், எ-று.

வி. இலனென்னுங்குறிப்புவினைப்பகுபதங்களிரண்டினுள்முன்னையது, தனித்தன்மையிலும், பின்னையது, படர்க்கையொருமையிலும்,வந்தது. தனித்தன்மையிலேவந்தது,உளனுலென்னுமையுண்டு என்பதினுலும்; பந்தமடி தொடைபாவினங்கூறுவன்-என்பதினுலும்; அறிக. இலமென்று, பாடஞ்சொல்லுவாருமுண்டு. அந்தத்தீவினையினுலே, சனனந்தோறும் அதிகதரித்திரனுவான் என்பதாம். இனியிதற்குப்பொருளினுலே தரித்திரனென்று நினைத்துத்தீவினைகளைச்செய்யாதொழிகசெய்யின் அப்பொருளினுலன்றியும் நற்குணம் நற்செய்கைகளாலும்தரித்திரனுவானென்றுசொல்வாரும் உண்டு. மற்றும்-என்பது-மற்றுங்கூடுமனைமடிதுயில் என்றாற்போல, மறுபடியும் என இடப்பொருள்குறித்துநின்றது. பெயர்த்து-என்பது, வேறுபட்டு என்னும்பொருள்படநின்றவினையெச்சம். அது, மறுபடியும்வேறுபட்டிலனாகும் என, ஆக்கவினைக்குறிப்புக்கொண்டுமுடிந்தது.

௨௱௬. தீப்பாலதான்பிறர்கட்செய்யற்கநோய்ப்பால
தன்னையடல்வேண்டாதான்.

ப. எது-துனபஞசெயயுஙகூறறவாகியபாவஙகடனனைபபினவநதுவருததுதலைவேணடாதவனறீமைககூறறவாகியவினைகளைததானபிறாமாடடுசசெயயாதொழிகவெனறவாறு.

வி. செயயினபபாவஙகளடுதலொருதலையெனபதாம.

பு. (தீய-ன்) எ-இ-ள். நோய்ப்பால-துன்பஞ்செய்யுங்கூறு உடையவையாகிய (பாவங்கள்,) தன்னையடல்வேண்டாதான்-தன்னைப்பின்வந்து வருத்துவதை விரும்பாதவன், தீப்பால-தீமைக்கூறுஉடையவையாகிய(வினைகளை,)தான்பிறர்கட்செயற்க-தான்பிறரிடத்திற்செய்யாதொழிக, எ-று.

வி. செய்தாற்பாவங்கள் தன்னை வருத்தப்படுத்துவது, நிச்சயமென்பதாம். இனிநோய்ப்பால, என்பதற்கு; வியாதிக்கூறுகளையுடைய துன்பங்கள், எனப்பொருள்கொள்வதேது

ணிவு. என்னெனின், மூழ்ந்தபிணிநலிய முன்செய்த வினையெ ன்றேமுனிவார்தாமும்-எனவும்; சன்மாந்தரகிருதம்பாபம்வி யாதிரூபேணபீடிதம்-எனவும், சான்றோ ரிலக்கியந்தோறும் வழங்கிவருதலால், எனக்காண்க.

உ௱எ. எனைப்பகையுற்றாருமுய்வர்வினைப்பகை
வீயாதுபின்சென்றடும்.

ப. எது-எத்துணைப்பெரியபகையுடையாருமதனையொருவாற்றாற் றப்புவர் அவ்வாறன்றித்தீவினையாகியபகைநீங்காதுபுக்குழிப்புக்குக்கொல்லும் எறு.

வி. வீயாதுடம்பொடுநின்றவுயிருமில்லையென்புழிப்போலவீயாமை நீங்காமைக்கண்வந்தது.

பு. (எ-ம்) எ-இ-ள். எனைப்பகையுற்றாரும்-எவ்வளவுபெ ரும்பகையுடையவரும், உய்வர்-(அதையொருவிதத்தினாலே) தப்பிப்பிழைப்பார், (அப்படியல்லாமல்) வினைப்பகை-தீவி னையாகியபகையானது,வீயாது-நீங்காமல, பின்சென்று-போன இடமெல்லாம்போய், அடும்-கொல்லும், எறு.

வி. வீயாதுடம்பொடுநின்றவுயிருமில்லை என்ற இடத்துநும், வீயாமை; நீங்காமைப்பொருள்பட நின்றது.

உ௱அ. தீயவைசெய்தார்கெடுதனிழறன்னை
வீயாதடியுறைந்தற்று.

ப. எது-பிறர்க்குத்தீவினைசெய்தார்தாங்கெடுதலெத்தன்மைத்தெனி லொருவனிழனெடிதாகப்போயுமவனைவிடாதுவந்தடியின்கட்டங்கியத ன்மைத்தென்றவாறு.

வி. இவ்வுவமையைத்தன்காலம்வருந்துணையும்புலனாகாதிருப்பப்பற்றி நின்றதுவந்துழியுருப்பதாயதீவினையைச்செய்தார்பின்னைத்தாங்கெடுந்தன்மையாகியுரைப்பாருமுளர்-அஃதுரையன்றென்பதறந்த அடியுறைந்த நிழறன் னைவீந்தற்றென்னாதுவீயாதடியுறைந்தற்றென்றபாடமேசரியாயிற்று-மேலவீ யாதுபின்சென்றடுமென்றாரீண்டதனையுவமையான்விளக்கினார்.

பு. (தீ-று) எ-இ-ள். தீயவைசெய்தார்கெடுதல்-பிறர்க் குத்) தீவினைகளைச்செய்தவர்கெடுவது, (எந்தத்தன்மையையு டையதென்றால்)நிழறன்னைவீயாது-ஒருவன்நிழலானது (நெ டிதாகப்போயும்) அவனைவிட்டுநீங்காமல, அடியுறைந்தற்று- (வந்து) பாதத்தில் அடிங்கினதன்மையையுடையதாம, எறு.

வி. இந்த உவமையைத்தன்காலம்வருமளவும் வெளிப்படாது உயிரைப்பற்றிநின்று, அக்காலம்வந்தபோது தோற்றுவதாகியதீவினையைச்செய்தவர், பின்பு அதினாலேகெடுதற்கு உவமையாக்கிச்சொல்வாருமுண்டு. அது உரையாகாது என்பதற்கு, அடியுறைந்தநிழறன்னைவீந்தற்று என்னுமல்வீயாதடியுறைந்தற்று, என்றபாடமேசாட்சியாயிற்று. மேலேசொல்லியகுறளிலே, வீயாதுபின்சென்றடும் என்றார், இங்கேயதை உவமையினாலேவிளங்கச்சொன்னார்.

இனியிதற்குவேறோர்முடிபு. தீயவை-தீவினைகளானவை, செய்தார்-(அவற்றைச்) செய்தவர்கெட, கெடுதல் கெடுவது, (யாதுபோலுமெனின்) நிழறன்னைவீயாது-ஒருவனுடையநிழலானது அவனை விட்டுநீங்காமல், அடியுறைந்தற்று-அவன்பாதத்திலேயடங்கிநின்று(அவன்கெடக்கெடுதல்)போலும்,எ-று.

இதற்கு-வி நிழலுண்டாவதற்குக் காரணமாகிய ஒருவனிறக்குமளவும் அவனைவிட்டுநீங்காமல்அடியைப்பற்றியேநின்று, அவனிறந்தபொழுதேயொழியும்நிழலைப்போலத் தீவினைகளைச்செய்தவர் கெடுமளவும்விட்டுநீங்காமல் அவரைப்பற்றியேநின்று, அவர்கெட்டபொழுதேயொழியுமாதலாலே, தீயவைசெய்தார்கெடக்கெடுதல்நிழறன்னைவீயாதுஅடியுறைந்து அவன்கெடக்கெடுதல்போலும்-எனவிரித்துக்கொள்க. என்னவெனின்இதுதொழிலுவமையாதலாற், பொருளிலேவந்தகெடுதலாகியதொழிலை, யுவமையிலும்பிரித்துச்சொல்லவேண்டும். சொன்னால், அவன்கெடாமல்நிழல்கெடாதாதலால், அவன் கெட என்பது, அவாய்நிலையாகவந்து இயையும். இயையவே, பொருளிலும்செய்தார்கெட என்பதுதானேவந்தியைதல்காண்க. செயதார்கெடத்தீயவைகெடுதலாவது,செய்தார்தீவினைப்பயன்களையனுபவிக்குமளவும்நின்றுநீங்குவது.

௨௱௯. தன்னைத்தான்காதலனாயினெனைத்தொன்றுந்
துன்னற்கதீவினைப்பால்.

ப. எ-து - ஒருவனறனனைததானகாதலசெயதலுடையவனாயிறதீவினையாகியபகுதியெததுணையுஞசிறிதெனருயினுமபிறாமாடடுசசெயயாதொழிகவெனறவாறு.

வி. நலவினைதீவினையெனவினைபபகுதியிரணடாகவிறறீவினைபபாலென றா-பிறரமாடடுசசெயததீவினைதனமாடடுததுனபமபயததலவிளககினாராகவி றறனனைததானகாதலனாயினெனறா-இவையாறுபாடடானுமபிறரககுததீவி னைசெயயிறருஙகெடுவரெனபதுகூறபபடடது.

பு. (தன்-ல்) எ-இ-ள். தன்னைத்தான்காதலனாயின்-(ஒருவன்) தன்னைத்தானாசைப்படுதலையுடையவனானால், தீவினைப்பால்-தீவினையாகியபகுப்பு, எனைத்தொன்றும்-எவ்வளவு(சிறியது) ஒன்றானாலும், துன்னற்க-(பிறரிடத்திற்) செய்யாதொழிக, எ-று.

வி. நல்வினைதீவினையெனவினைப்பகுப்பு இரண்டாதலால், தீவினைப்பால், என்றார். பிறரிடத்திற்செய்ததீவினைதன்னிடத்திலேதுன்பத்தைவிளைவிப்பதைமுன்னே, வினைப்பகைவீயாதுபின்சென்றடும்; எம், தீயவைசெய்தார்கெடுதல், எனவும்; தெரிவித்தாராதலாலே; தன்னைத்தான்காதலனாயினென்றார். இனிஎனைத்தொன்றுந்துன்னற்கதீவினைப்பால்என்பதற்கு, தீவினைக்கூறு ஒன்று எம்மாத்திரஞ்சிற்றளவையுடையதாயினும் அதனைச்சேராதொழிக. வெனப்பொருளுரைத்தால் இக்குறளுக்கு உண்டாந்தன்மையுணர்ந்துகொள்க. இவையாறுபாட்டாலும்பிறர்க்குத்தீவினைசெய்தவர்கெடுவரென்பதுசொல்லப்பட்டது.

உ௱௰. அருங்கேடனென்பதறிகமருங்கோடித்
தீவினைசெய்யானெனின்.

ப. எது-ஒருவனசெநநெறிககடசெலலாதுகொடுநெறிககடசெனறு பிறனமாடடுததீவினைசெயயானாயினவனையரிதாகியகேடடையுடையனெனபத றிகவெனறவாறு.

வி. அருமை-இனமை-அருஙகேடனெனபதனைசசெனறுசோகலலாப புளளபுளளிலெனறாழவியனகுளமெனபதுபோலககொளக - ஓடியெனனுமவி னையெசசமசெயயானெனனுமெதிரமறையுடசெயதலொடுமுடிநதது- இதனா றறீவினைசெயயாதவனகேடிலனெனபதுகூறபபடடது.

பு. (அரு-ன்) எ-இ-ள். மருங்கோடி-(ஒருவன் பக்கத்திலேபோய்,) ஒருவன்நல்லவழியிலேபோகாமற் கெட்டவழியிலேபோய், தீவினைசெய்யானெனின்-(பிறர்க்குத்) தீவினைகளைச்செய்யானானால், (அவனை) அருங்கேடனென்பதறிக-அரிதாகியகேட்டையுடையவனென்பதாக அறிந்துகொள்க, எ-று.

வி. அருமை, இன்மை அருங்கேடன்என்பதனைச்-சென்றுசேர்கல்லாப்புள்ள-புள்ளிலென்றாழ்வியன்குளமென்பதில்-சென்றுசேராதபுட்களையும் அந்தப்புட்களைப்போலவேசென்றுசேராதவெப்பிலையுமுடையகுளமெனப்பொருள் கொள்வதுபோலக்கொள்க. பட்சிகளுஞ்சூரியகிரணங்களுஞ்சேராதகுளமென்றவாறு. ஓடியென்னும் வினையெச்சம் செய்யான் என்னும் எதிர்மறைவினையின் பகுதியோடுமுடிந்தது. இனி-அரும்பெறற்செல்வம் என்பதுபோல, அருங்கேடன் என்பதைக், கேடருமையன், எனத்திருப்பிக்கேடில்லாதவர், எனப்பொருள்கொளினமையுந்தன்மையுமுணர்க. இதிலே, தீவினைசெய்யாதவன்கேடில்லாதவனென்பது, சொல்லப்பட்டது.

---

உஉ. அதிகாரம்.

## ஒப்புரவறிதல்.

ப-ம். ஒப்புரவறிதல்-அஃதாவது உலகநடையினையறிந்துசெய்தல்-உலகநடைவேதநடைபோலவறநூல்களுட்கூறப்படுவதன்றித்தாமேயறிந்து செய்யுந்தன்மைத்தாகலின் ஒப்புரவறிதலென்றார்-மனமொழிமெய்களாற்றவிர்தற்குவனகூறினார் இனிச்செய்தற்குவனவற்றுள்ளெஞ்சிநின்றனகூறுகின்றாராகலினித் தீவினையச்சத்தின்பின்வைக்கப்பட்டது.

பு-ம். (ஒப்-தல்) அதாவது, உலகநடையையறிந்துஉபகாரஞ்செய்தலைச்சொல்வது. உலகநடை வேதநடைபோலத் தருமசாத்திரங்களிலே சொல்லப்படுவதன்றித்தாமேயறிந்து செய்யுந்தன்மையையுடையது ஆதலால், ஒப்புரவு அறிதலென்றார். மனவாக்குக்காயங்களாலே ஒழியத்தக்கவை சொல்லி இனிச்செய்யத்தக்கவையுள் மிகுந்திருந்தனவற்றைச்சொல்லுகின்றாராதலாலிது தீவினையச்சத்தின்பின்வைக்கப்பட்டது.

உ௱௰௧. கைம்மாறுவேண்டாகடப்பாடுமாரிமாட்
டென்னாற்றுங்கொல்லோவுலகு.

ப. எது-தமக்கு நீருதவுகின்றமேகங்களினிடத்துயிர்களென்னகைம்மாறுசெய்யாநின்றனவாதலான் மேகங்களைப்போலவார்செய்யுமொப்புரவுகளுங்கைம்மாறுநோக்குவனவல்லவென்றவாறு.

வி. எனஞறறுமெனறவிஞயாதுமாறருவெனபதுதோனறநிறறவினஅ வருவிததுணாககபபடும-தவிருநதனமையவலலவெனபதுகடபபாடெனனும பெயராலெபெறபபடடது-செயவாரதுவேணடாமைமைசசெயயபபடுவன மேலேறறிஞர.

பு. (கை-கு) எ-இ-ள். மாரிமாட்டு-(தங்களுக்குநீரையுத வுகின்ற) மேகங்களிடத்து, என்னுற்றுங்கொல்லோவுலகு-உயி ர்களென்ன (கைமாறு உதவியைச்) செய்யும், (ஆதலால் அந்த மேகங்களுக்கு ஒப்பானவர்செய்யும்) கடப்பாடு - ஒப்புரவுக ளும், கைமாறுவேண்டா-கைமாறுஉதவிகளைவிரும்பாவரம், எறு.

வி. என்னுற்றுமென்றவினு, ஒன்றுஞ்செய்யாதொழியு மென்பதுதோன்றநின்றதினுலே, அது, வருவித்துரைத்துக் கொள்க. கடப்பாடு என்னும்பெயராலே, கைமாறுகுறியாம லே செய்யுமுறைமையுடையவையென்பது, பெறப்படும். கொடைகடப்பாடுமேற்கும்என்பதுநிகண்டு. கடம்-என்பது ம், கடமை என்பதும், முறைமை. அது தொழிற்பெயராங்கா ல், கடம்படல், கடப்படல்; கடப்பாடு, எனநிற்கும். இனிமக ரவிறுதியஃறிணைப்பெயரினகரமோடுறழா நடப்பனவுளவே- என்னுஞ்சூத்திரத்தால், கடன்படல் எனவும், வரும்-இது, இக் காலத்துவேறுபொருள்குறித்துவழங்கப்பட்டது. கைமாறு, குறித்தபோது. அதைக்கடப்பாடென்பதுகூடாதாகையாலே, செய்வாரது வேண்டாமையைச்செய்யப்படுவனவர்றின்மே லேற்றிச்சொன்னுர்.

உாயஉ. தாளாற்றித்தந்தபொருளெல்லாந்தக்கார்க்கு
வேளாண்மைசெய்தற்பொருட்டு.

ப. எது-தகுதியுடையாாககாயினமுயறலெசசெயதீடடியபொருணமு ழுதுமஒபபுரவுசெயதறபயயததாமெனறவாறு.

வி. பிறாககுதவாதாரைபபோலேதாமேயுணடறபொருடடுமவைததி ழததறபொருடடுமனறெனபதாயிறறு.

பு. (தா-டு) எ-இ-ள். தக்கார்க்கு-நடுவுநிலைமையுடையா ர்க்கானல், தாளாற்றித்தந்த பொருளெல்லாம் - முயற்சியைச் செய்துதொகுத்துவைத்தபொருள்முழுவதும், வேளாண்மை

செய்தற்பொருட்டு-ஒப்புரவுசெய்தலாகிய பிரயோசனத்தை யுடையதாம், எ-று.

வி. பிறர்க்கு உதவாதவரைப்போலே, தாமே யுண்ணுதற்பொருட்டும், வைத்து இழந்துபோம்பொருட்டும்,அன்றென்பதாம் ஆயின், என்பதுகுறைந்துநின்றது.

இனி இதற்குவேறுரை. தாளாற்றித்தந்தபொருளெல்லாம்-ஒருவன்முயர்சியைச்செய்து தொகுத்தபொருண்முழுவதும், (எதற்காகவெனின்) தக்கார்க்கு-சான்றோர்க்கு, வேளாண்மைசெய்தற்பொருட்டு-உதவிசெய்தற்காக, எ-று.

இதற்கு-வி. தக்கார், முனிவர் அறிவுடையோர்முதலாயினவர். எல்லாப்பற்றுக்களையும்விட்டவராதலால், அவர்க்குஉதவிசெய்தற்பொருட்டாகவே இல்லிடத்து இருந்து ஒருவன் முயன்றுபொருளையீட்டுவதென்பதாம். வறியார்க்கொன்றீவது, அற்றாரழிபசிதீர்த்தல்,முதலாகமற்றையார்க்குச்செய்வனவெல்லாஞ்சொன்னார். ஒப்புரவறிதலாவதுதானே உலகத்திலொத்ததறிந்து உபகரித்தலாதலால், இவ்வதிகாரத்துள்ளேமுன்கைம்மாறுவேண்டாகடப்பாடு எனப்பொதுவகையாற்றொகுத்துச்சொல்லிப்பின்னிதிலேவகுத்துச்சொல்லத்தொடங்கி அறிவுடையர்முனிவர்முதலியவரிடத்தொத்ததறிந்துசெய்கவென்றார். அவரிடத்தொத்ததறிந்துசெய்தலாவது,அவர்பொறிவழிச்செல்லாதிருத்தலால், பசிநோய்முதலியவாராமலவற்றிற்குவேண்டுவனதானேசென்றறிந்துசெய்வது. உதவிசெய்தற்கிடந்தக்காரொன்பதை, தான்சிறிதாயினூஉந் தக்கார்கைப்பட்டக்கால், என்பதிலேயறிக. பொருளெல்லாந்தக்கார்க்குவேளாண்மைசெய்தற்பொருட்டெனின்,மற்றவர்க்குத்தக்கபடிபொருள்வகையாற்செய்தலுரித்தென்பது, அருத்தாபத்தியாற்பெறப்படும். இதனுள், ஒருவன் என்பதுசொல்லெச்சமாய்க்குறைந்துநின்றது.

௨௱௰௩. புத்தேளுலகத்துமீண்டும்பெறலரிதே
யொப்புரவினல்லபிற.

ப. எ-து-தேவருலகத்துமிவ்வுலகத்துமொப்புரவுபோலநல்லனபிறசெயல்களைப்பெறலரிதெனறவாறு.

வி. ஈவாருமேறபாருமினறியெலலாருமொருதனமையராதலிறபுததே ளுலகததரிதாயிறறு-யாவாககுமொபபதிதுபோறபிறிதொனறினமையினிவவுல கததரிதாயிறறு-பெறறகரிதெனறுபாடமோதிபபெறுதறகுககாரணமரிதென, அரைபபாருமுளர்-இவைமூனறுபாடடானுமொபபுரவினதுசிறபபுககூறபபட டது.

பு. (புத்-ற) எ-இ-ள். புத்தேளுலகத்துமீண்டும்-தேவருலகத்திலும் இந்தவுலகத்திலும், ஒப்புரவினல்லபிற-ஒப்புரவு போலநன்மையுடையனவாகிய பிறசெயல்களை, பெறலரிது-(ஒருவன்) பெறுவதரிதாம், எறு.

வி. கொடுப்பாருங்கொள்வாருமில்லாமல் எல்லாருமொருதன்மையராயிருப்பதினாலே, புத்தேளுலக்த்திலரிதாயிற்று. எல்லார்க்குமொப்பது இதுபோலவேறொன்று இல்லாததினாலே, இந்த உலகத்திலரிதாயிற்று. பெறற்கரிதென்றுபாடஞ்சொல்லிப்பெறுதற்குக்காரணமரிதென்றுசொல்வாருமுண்டு. இவைமூன்றுபாட்டாலும், ஒப்புரவின்சிறப்புச்சொல்லப்பட்டது.

உாயசு. ஒத்ததறிவானுயிர்வாழ்வான்மற்றையான்
செத்தாருள்வைக்கப்படும்.

ப. எது - உயிரோடுகூடிவாழவானவானுலகநடையினையறிநதுசெய வானஃதறிநதுசெயயாதவனுயிருடையனேயாயினுஞசெததாருளொருவனாக ககருதபபடுமெனறவாறு.

வி. உயிரினறிவுஞசெயலுஙகாணுமையிறசெததாருளவைககபபடுமெ னறா-இசனுலகநடைவழுவேதநடைவழுபபோலததீாதிறனுடைததனறெ னபதுகூறபபடடது.

பு. (ஒத்-ம்) எ-இ-ள். உயிர்வாழ்வான்- உயிரோடுகூடிவாழ்பவன், ஒத்ததறிவான் - உலகநடையையறிந்துஉபகாரஞ்செய்பவன், மற்றையான்-அதையறிந்துசெய்யாதவன், செத்தாருள்வைக்கப்படும்-(உயிருள்ளவனேயானாலும்) செத்தவருள்ளேயொருவனாகநினைத்துவைக்கப்படுவான், எறு.

வி. உயிரின் அறிவுஞ்செயலுங்காணாததினாலே, செத்தாருள்வைக்கப்படும் என்றார். இதினாலே, யுலகநடையின்குற்றம் வேதநடையின்குற்றம்போலத்தீருந்தன்மையுடையதன்று என்பது, சொல்லப்பட்டது.

உ௱௰௫. ஊருணிநீர் நிறைந்தற்றேயுலகவாம்
பேரறிவாளன்றிரு.

ப. எது-உலகநடையைவிரும்பிச்செய்யும்பெரியவறிவினையுடையவனது செல்வமூரினவாழ்வார்தண்ணீருண்ணுங்குள நீர்நிறைந்தாற்போலுமென்றவாறு.

வி. நிறைதலென்னுமிடத்து நிகழ்பொருளின்றொழிலிடத்திற்சேர்த்திக் கூறினார் -- பாழ்போகாது நெடிது நின்றெல்லார்க்கும் வேண்டுவன தப்பாதுதவு மென்பதாம்.

பு. (ஊ-ரு) எ-இ-ள். உலகவாம்-உலகநடையைவிரும்பிச்செய்யும். பேரறிவாளன்றிரு-பெரிதாகிய அறிவுடையவனது செல்வமானது, ஊருணிநீர்நிறைந்தற்று-ஊரிலுள்ளவர் தண்ணீருண்ணுங்குளமானது நீர்நிறைந்ததுபோலும், எ-று.

வி. நிறைதலென்னும் இடத்து நிகழ்பொருளாகிய நீரின்தொழிலை, அதற்கு இடமாகியகுளத்தின்மேலேற்றிச்சொன்னார். அந்தக்குளத்தைப்போலே,அறிவுடையவன்செல்வமானது, பாழ்போகாமல்நெடுங்காலம்நின்று, எல்லார்க்கும்வேண்டுவனவற்றைத்தப்பாமலேயுதவுமென்பதாம்.

உ௱௰௬. பயன்மரமுள்ளூர்பழுத்தற்றாற்செல்வ
நயனுடையான்கட்படின்.

ப. எது-செல்வமொப்புரவுசெய்வான்கண்ணேபடுமாயினது பயன்படுமரமூர்நடுவேபழுத்தாற்போலுமென்றவாறு.

வி. உலகநீதிபலவற்றுள்ளுமொப்புரவுசிறந்தமையின் தனைநயனென்றார்-எல்லார்க்குமெளிதிற்பயன்கொடுக்குமென்பதாம.

பு. (ப-ன்) எ-இ-ள். செல்வநயனுடையான்கட்படின்-செல்வமானது ஒப்புரவுசெய்வானிடத்துஉண்டானால், (அது) பயன்மரமுள்ளூர்பழுத்தற்று-பலன்படுமரம்ஊர்நடுவேபழுத்ததுபோலும், எ-று.

வி. உலகநீதிபலவற்றுள்ளும் ஒப்புரவு சிறந்ததினாலே, அதைநயன்என்றார். எல்லார்க்கும் எளிதிலேபிரயோசனத்தைத்தருமென்பதாம்.

உ௱௰எ. மருந்தாகித்தப்பாமரத்தற்றாற்செல்வம்
பெருந்தகையான்கட்படின்.

ப. எ-து-செலவமொபபுரவுசெயயுமபெரியதகைமையுடையானகணணேபடுமாயினஃதெலலாவுறுபபுமபிணிகடகுமருநதாயததபபாமரததையொககுமெனறவாறு.

வி. தபபுதலாவது-கோடறகரியவிடஙகளினினறுதனமறைநதுநினறுதலகாலததானவேறுபடடாதலபயனபடாமை - தனகுறைநோககாதெலலாவருததமுநதீககுமெனபதாம - இவைமூனறுபாடடானுஙகடபபாடடாளனுடையபொருளபயனபடுமாறுகூறபபடடது.

பு. (மரு-ன்) எ-இ-ள். செல்வம்பெருந்தகையான்கட்படின்-செல்வமானது (ஒப்புரவுசெய்யும்) பெருந்தன்மையுடையவனிடத்துண்டானால், (அது) மருந்தாகி-(சகலமும் வியாதிகளுக்கு) மருந்தாய், தப்பாமரத்தற்று. தப்பாதமரத்தையொக்கும், எறு.

வி. தப்புதலாவது, வியாதிகளைத்தீர்க்காமையும்; கொள்ளக்கூடாத இடங்களிலே நின்றுவது, மறைந்துநின்றுவது, காலத்திலேவேறுபட்டாவது, பிரயோசனப்படாமையும், முதலியனவாம். யாவருந்தன்கிளைதளிர்முதலான உறுப்புக்களைமுறித்தும் பறித்துஞ்செய்யப்பட்ட தன்குறைவும் வருத்தமும் நோக்காமலே, அவர்களுடைய வருத்தங்களைத்தீர்ப்பதுபோலப், பெருந்தகையாளன் செல்வமும்யாதொருமாறுபாடுமில்லாமலே எளிதாகவெளிப்பட்டு நின்றுகொடுக்கக்குறைபடுதலும்வருத்தமும்நோக்காதுதப்பாமலேயடைந்தவர் வருத்தங்களை யொழிக்குமென்பதாம். இவை மூன்றுபாட்டாலும், ஒப்புரவுடையவன்பொருள் பிரயோசனப்படுந்தன்மைசொல்லப்பட்டது.

உ௱௰அ. இடனில்பருவத்துமொப்புரவிற்கொல்கார்
கடனறிகாட்சியவர்.

ப, எ-து-செலவஞசுருஙகியகாலததுமொபபுரவுசெயதறகுததளரார தாஞசெயயததகுவனவறறையறிநதவியறகையறிவுடையாரெனறவாறு.

வீ. பிறவெலலாமொழியினுமிஃதொழியாரெனபதாம.

பு. (இட-ர்) எ-இ-ள். இடனில்பருவத்தும் - செல்வம் அற்றகாலத்தும், ஒப்புரவிற்கொல்கார்-உபகாரஞ்செய்தற்கு

(மனந்) தளரார், கடனறி - (தாம்செய்யத்தகுவனவாகிய) முறைமைகளையறிந்த, காட்சியவர் - அறிவுடையவர், எ-று.

வி. செல்வம் ஒழிந்தாலும் - உபகாரியானவன் உபகரிப்பதற்குப்பண்டுபோலவே மன ஊக்கங்கொள்வானென்பதாம். மனம் என்பது, சொல்லெச்சமாய்க்குறைந்துநின்றது. இடம், செல்வம். தார்வேந்தர்கெட்டால் - மனஞ்சிறியராவரோ, எனப்பிறர்சொல்லுதலுங்காண்க.

௨௱௰௯. நயனுடையானல்கூர்ந்தானுதல்செயுநீர்மை
செய்யாதமைகலாவாறு.

ப. எ-து-ஒபபுரவுசெயதலையுடையானலகூாநதானுதலாவதுதவிராது செயயுநீாமையுடையவவொபபுரவுகளைசசெயயபபெறுதுவருநதுகினறவியலபாமெனறவாறு.

வி. தானுகாவனநுகாபபெறுமையனறெனபதாம-இவையிரணடுபாடடானுமவறுமையானொ..புரவொழிதறபாறறனறெனபதுகூறபபடடது.

பு. (நய-று) எ-இ-ள். நயனுடையான் - (ஒப்புரவுசெய்யும்) நீதியுடையவன், நல்கூர்ந்தானுதல் - தரித்திரப்பட்டவனுவது, செயுநீர்மை - (தவிராமலே) செய்யப்படுந்தன்மையையுடைய ஒப்புரவுகளை, செய்யாது - செய்யப்பெறுமல், அமைகலாவாறு - தான்சம்மதிப்படாத (வருந்துகின்ற) நெறியாம், எ-று.

வி. தான் அனுபவிக்கப்படுவனவற்றையனுபவிக்கப்பெறுததன்மையன்று என்பதாம். இவை இரண்டுபாட்டாலும் வறுமையினுலே ஒப்புரவுசெய்தல் ஒழியுந்தன்மையதன்றென்பதுசொல்லப்பட்டது.

௨௱௨௰. ஒப்புரவினுல்வருங்கேடெனினஃதொருவன்
விற்றுக்கோட்டக்கதுடைத்து.

ப. எ-து-ஒபபுரவுசெயதலாலொருவனுககுபபொருடகேடுவருமெனபாருளராயினககேடுதனனைவிறறுயினுஙகொளளுநதகுதியையுடைததெனறவாறு.

வி. தனனைவிறறுககொளளபபடுவதொருபொருளிலலையனறேயிஃதாயினதுவுஞசெயயபபடுமெனறதுபுகழபயததலாகியிதனுலொபபுரவாறகெடுவதுகேடனறெனபதுகூறபபடடது.

பு. (ஒப்-று) எ-இ-ள். ஒப்புரவினால்வருங்கேடெனின்-ஒப்புரவுசெய்ததினாலே (பொருட்) கேடுவருமென்று சொல்லுவாருண்டானால், அஃது-அந்தக்கேடானது, ஒருவன்விற்று-ஒருவன் (தன்னை) விற்றுப்போட்டானாலும், கோட்டக்கது டைத்து-கொள்ளுந்தகுதியையுடையதாம், எ-று.

வி. தன்னைவிற்றுக்கொள்ளப்படுபொருள் இல்லையல்லவா, இது உண்டானால் அந்தக்கேடும்வாங்கப்படுமென்றுசொன்னது, புகழ்தருவதுகுறித்தெனக்கொள்க. தன்னை என்பது, வருவிக்கப்பட்டது. இனிக்கோட்டக்கது என்பதற்கு, செய்தக்க என்பதுபோலச்செயவெனெச்சம் ஈறுகெட்டு, முதல் நீண்டுநின்றதெனக்கொண்டு,(கொள்ளத்தக்கதொழிலை)யுடையது, எனப்பொருளுரைத்தாலுளதாந்தன்மையுணர்க. இதினாலே, ஒப்புரவுசெய்துகெடுவதில்லையென்பதுசொல்லப்பட்டது.

---

உரு. அதிகாரம்.

## ஈ கை.

ப-ம. ஈகை அஃதாவது-வறியராயேற்றார்க்குமாற்றாதுகொடுத்தல். இதுமறுமைநோக்கியதாகலின்இம்மைநோக்கியவொப்புரவறிதலின்பின்வைக்கப்பட்டது.

பு-ம். (ஈகை) அதாவது, தரித்திரராகிவந்து இரந்தவர்க்கு இல்லையென்றுசொல்லாமலே கொடுப்பதைச்சொல்வது. இதுமறுமைநோக்கியதாதலால், இம்மைநோக்கிய ஒப்புரவறிதலின்பின்வைக்கப்பட்டது. இனிவேறு அதிகாரமுறைமை, இது ஒப்புரவறிதலோடுமொருபுடையொத்திருத்தலால் தன்பின் வைக்கப்பட்டது.

உ௱உக. வறியார்க்கொன்றீவதேயீகைமற்றெல்லாங்
குறியெதிர்ப்பைநீரதுடைத்து.

ப. எது-ஒருபொருளுமில்லாதார்க்கவாவேண்டியதொன்றைக்கொடுத்தலேபிறர்க்குக்கொடுத்தலாவது அஃதொழிந்தவெல்லாக்கொடையுங்குறியெதிர்ப்பைக்கொடுக்குநீர்மையையுடைத்தென்றவாறு.

